

வடிக்கோல வாள்நெடுங்கண் மாமலராள் செவ்விப்
படிக்கோலம் கண்டகலாள் பன்னாள் - அடிக்கோலி
ஞாலத்தாள் பின்னும் நலம்புரிந்த தென்கொலோ
கோலத்தா லில்லை குறை

வடிக்கட்டின அழகை உடையவளும், ஒளி பொருந்திய நீண்ட திருக்கண்களை உடையவளும், சிறந்த தாமரை மலரில் பிறந்தவளுமான பெரிய பிராட்டியார் சிறப்புற்ற அவனது திருமேனியின் அழகை கண்ணால் அனுபவித்து சிறிது நேரமும் விட்டுப் பிரியாமல் எப்பொழுதும் கூடியே இருக்கிறாள். எம்பெருமானுடைய அழகிலே பிராட்டி ஆழங்கால் பட்டு அழுந்துகிற படியைக் கண்டு வைத்தும் பூமி பிராட்டியானவள் பாரித்துக் கொண்டு அப்பெருமானிடத்தில் ஆசையைப் பெருக்கிக் கொண்டிருப்பது என்னோ? எத்தனை பேர்கள் அனுபவித்தாலும் ஏற்றிருக்கும் படியான அழகினால் குறையில்லையன்றோ! (எம்பெருமானிடத்தில் அழகு அளவற்றிருப்பதனால் பலரும் ஆசைப்பட நேர்கின்றது)

இரண்டாம் திருவந்தாதி - 82.

ஆகஸ்ட், 1985

# ஸப்தகிரி

இதழ் 3 மலர் 16

தனிப்பிரதி/ரு. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

அட்டையில் : பக்தை மீரா.

ஓவியம் : திரு. ஆர். பி. பாபுநாத்

2-வது : பவித்ரோற்சவம்—திருமலை.

3-வது : திருமலை பிரமமோற்சவம் :

சின்ன சேஷ வாகனம்.

பின்னட்டையில் : ஸ்ரீ விகநஸாசார்ய.

*சிறப்பாசிரியர் :*

திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்:*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்....

'அன்பு' எனும் உணர்வு அல்லது பண்பு வாழ்க்கையின் ஒரு நியதியாகும். அவ் அன்பே மனித நம்பிக்கைக்கும், வாழ்வின் பிடிப்பிற்கும் வழிகோலுகின்றது. இந்த உலகம் அன்பிலே பிறந்து அன்பிலே அமிழ்ந்து விடுகின்றது. பிறந்த எந்த உயிரும் அன்பினை நாடுகின்றது; தேடுகின்றது. இவ்அன்பே தாய்-சேய், உடன்பிறப்பு, கணவன்-மனைவி, உற்றார்-உறவினர் என்ற பல நிலைகளில பிறந்து வளர்ந்து மலருகின்றது. இவற்றில் கணவன்-மனைவி உறவு, அவற்றினால் ஏற்படும் அன்பின் பிணைப்பு எல்லா உறவுகளையும்விட, அன்பின் எல்லா நிலைகளையும்விட சிறப்பாகப் பேசப்படுகின்றது. ஆண்-பெண் என்ற பாலுணர்வின் பின்னணியில் இவ்வுறவு பிறந்தாலும், அவர்களிடையே ஏற்படும் ஆத்மார்த்தமான அன்பினால் மட்டுமே அவ்வுறவு பலப்படுத்தப்படுகின்றது; பிரகாசிக்கப்படுகின்றது. இக் கணவன்-மனைவி உறவுக்கு முன், உற்ற ஓர் உறவாக, அன்பின் பெருமையைப் பறைசாற்றும் பாசறையாக அமைவது காதலன்-காதலி உறவு. காந்தர்வ நிலை என்று கூறப்படும் இவ்வுறவு நிலையைத்தான் களவு வாழ்க்கை எனத் தமிழினம் கூறிடும். பெற்றவரை மறந்து, உற்றவரை துறந்து, மற்றவரை எதிர்த்து, தன் கைபற்றியவரைப் பின்பற்றிச் செல்லும் இந்த உறவில் அன்பின் உச்சியைக் கண்டிடலாம். அவ்வுச்சியின் உயர் மட்டமதான பக்தி. கொண்டவனுக்குத் தன்னையே அர்ப்பணித்துவிடும் காதலியின் ஆத்ம சமர்ப்பணைதான் பக்தியின் இறுதிப்படி. முழு அன்பின் வடிகாலாக இந்த உறவு அமைகின்றது. இந்த உறவின் உண்மையைத்தான் பாகவதத்தின் ராசகிரீடை நமக்கு உணர்த்துகின்றது. காமமும் மோகமும் கூட அன்பின் பெருமையைப் பேசிடும் நிலைகளேயாம் என்பதை கோபியர்-கண்ணன் உறவுநிலை விளக்கிடும். அன்பின் அடிப்படையிலே எந்த உறவு கொண்டும் தன்னை எவரும் அடைந்திட முடியும் என்பதைக் கூறத்தான், ராசகிரீடைக்குக் கண்ணன் நாயகனானான். காம விகாரங்களை, மிருக உணர்ச்சிகளை உண்மையான காதல் உறவின்மூலம் களைந்திடலாம் என்பதை உணர்த்தத்தான் ராசகிரீடையாகும். கண்முன் இருக்கும் விக்ரகத்திலிருந்து மானசிகமான உருவத்திற்கும், அதிலிருந்து தனித்தன்மை உடைய தேவனுக்கும், பின்னர் அதிலிருந்து நிர்க்குணமான பிரம்மத்திற்கும் தன் பக்தனை அழைத்துச் செல்லவே கண்ணன் ராசகிரீடை புரிகின்றான். அப்பரம்பொருள்தான் புருஷன்-பரமாத்மா அவனால் படைக்கப்பட்ட மற்றைய உயிர்கள் யாவும் ஜீவாத்மா. எந்த அன்பின் கருணையால் இந்த ஜீவாத்மாக்கள் பிறந்ததோ, அந்த அன்பின் சங்கமத்திலேயே கலந்திட அவை துடிக்கின்றன. இந்த துடிப்பின் தூய வடிவம்தான் கண்ணன் கோபியர் உறவு நிலை. இந்த உண்மையைத் தான் கோவிந்தன், கோபாலன், பசுபதி போன்ற பெயர்கள் விளக்குகின்றன. பரமனின் அவதாரமே தன் பக்தனை கடைத்தேற்றத்தான். ஜீவனின் வழி சென்று, அவனைத் தன் வழிக்கு அழைத்திடவே அவன் விரும்புகின்றான். கோபம், பயம், அன்பு, தோழமை, பக்தி போன்ற உணர்வுகளில் ஒன்றுதான காமமும் கூட.

இந்த 'காம'த்தின் வழிசென்று அக்கருத்தனின் அருமைகளை அறிந்திட்டு, அவன் புகழ்பாடவே பல மெய்யடியார்கள் தலைவன்-தலைவி உறவில், தன்னைக் காதலியாகவும், அப்பரமனை காதலனாகவும் வைத்துப் பாடிப் பரவசம் எய்தினர். ஒரு ஆண் தன்னைப் பெண்ணாகப் பாவித்து ஆண்டவனை ஆராதிப்பதைவிட ஒரு பெண்ணே அந்நிலையில் நின்று தன் உணர்வுகளைக் கொட்டிடும்போது அவ்அன்பின் பெருக்கிற்கு ஈடில்லை, இணையில்லை என்பதற்கு உதாரணங்களாக இருப்பவர்கள் தென்னாட்டில் கிடைத்திட்ட கோதையும், வடநாட்டில் பிறந்திட்ட மீராவுமாகும்.

'மோகத்தின் இறுதி நிலை முக்தி' எனும் கருத்தினை மெய்ப்பிக்கும் வகையில் விளங்குவன பக்திச் சுவையும் காதற்சுவையும் குழைத்துத் தந்திட்ட கோதையின் பாசுரங்கள். "அங்கைத் தலத்திடை ஆழி கொண்டான் அவன் முகத்து அன்றி விழியேன்" "ஒரு ஞான்று மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி விடைதான் தருமேல் மிகநன்றே" போன்று வரும் அடிகளின்மூலம் அரங்கனின்மீது ஆராக்காதல் கொண்டு 'திவ்ய பிரேமை'யின் சீர்மைக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டாக விளங்கிய 'அரங்கற் சேவியிற் கலந்த' ஆண்டாளைப் போன்றே, மதுர பக்திக்கு ஒரு இலக்கிய மேம்பாடு தந்திட்டு, பக்தி, கவிதை, இசை ஆகியவற்றின் சங்கமமாக, 'கொண்டவனை மறந்து கொண்டல் வண்ணனை கோரிய' அம்மீராவும் திகழ்ந்தாள். ஆண்டாளின் பாடல்களில் கருத்துச் செறிவு, பக்திப் பெருக்கு, சொற்திறமை, ஆன்மீக ஆழம் புதைந்திருக்க, அன்பின் ஏக்கம், பிரிவின் பெருந்துயர், இசையின் மேன்மை ஆகியன "அக்கிரிதர கோபாலா"வின் 'கோகுல நந்தலாலா'வின் காதலியான மீராவின் பாக்களில் ஒளிரக் காணலாம்.

இன்னும் கூறப்போனால் அன்றைய பாகவத காலத்து கோபியர்களின் வாரிசாக, நம்முன்னோர்களிடையே வாழ்ந்து காட்டிய ஒரு தீவிரமான கண்ணனின் காதலியை, ஆழ்ந்த அன்பின் பிரதிபலிப்பை, உறுதியின் உருவத்தை நாம் மீராவின் சரித்திரத்தையும், அவர்தம் பாடல்களையும் சற்றே புரட்டிப் பார்த்தால் அறிந்தின்புறலாம்.

# செய்திச் சுருக்கம்

**புதிய உறுப்பினர்கள் :**

திருமலை திருப்பதி தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் பட்டியலில் திருவாளர்கள் தலாரி ருத்ரய்யா, ஏ. வேங்கடேஸ்வர ராவ் (புதுதில்லி), ஆர். சத்யநாராயணு மற்றும் திருமதி. ஈ. சீதாதேவி ஆகியோர் புதிய உறுப்பினர்களாக சேர்க்கப்பட்டுள்ளனர். இவர்களுடைய பதவி பிரமாணம் திருமலையில் ஆந்திர மாநில சட்டசபைத் தலைவர் திரு. நாராயணராவ், மற்றும் ஆந்திர மாநில அறநிலையத் துறை அமைச்சர் திரு. எத்திராஜராவ் ஆகியோரின் முன்னிலையில், தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணு அவர்களால் செய்து வைக்கப்பட்டது.

**உண்டியலில் ரூ. 3 இலட்சம் :**

அண்மையில் திருமலையில் கோயில் உண்டியலில் பல நூறு ரூபாய் கட்டுக்கள் அடங்கிய ரூ. 3 இலட்சம் ரூபாய்களைக் கொண்ட கட்டு ஒன்று பக்தர் ஒருவரால் போடப்பட்டுள்ளது. அன்றைய உண்டியல் மூலமாக கோயில் வருமானம் ரூ. 7,15,910 ஆகும். மேலும் அன்று, அண்மையில் கோயில் வரலாற்றில் குறிப்பிடும்படி 191 கல்யாண உற்சவங்கள் பக்தர்களால் இறைவனுக்கு செய்விக்கப்பட்டன. இதன் மூலம் கோயில் வருமானம் ரூ. 70,500 ஆகும்.

**தங்க நகைகள் ஏலம் :**

அண்மையில் திருப்பதியில் தி. தி. தே. செயலகக் கட்டிடத்தில் தி. தி. தேவஸ்தானம் தன்னிடம் உள்ள கற்கள் பதிக்கப்பெற்ற தங்க ஆபரணங்களின் ஒரு பகுதியான 79 கிலோ கிராம் எடையுள்ள ஆபரணங்கள் பொது ஏலத்தில் விற்கப்பட்டன. இதன் மூலம் தி. தி. தேவஸ்தானத்திற்குக்கிடைத்த வருமானம் ரூ.1.19 கோடியாகும்.



**புதிய கிரீடம் :**

அண்மையில் திருமலை ஏழுமலையானுக்கு வைர கிரீடம் செய்யும் பணி தி. தி. தே. செயலாட்சித் தலைவர் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டது. ரூ. 6 கோடி செலவில் செய்யப்படும் இவ் வைர கிரீடத்திற்கு 25 கி. கி. எடையுள்ள தங்கம் பயன்படுத்தப்படும்.

**சமயச் சொற்பொழிவு நிகழ்ச்சிகள் :**

அண்மையில் திருப்பதியில் தி. தி. தே. செயலகக் கட்டிடத்தை அடுத்துள்ள மைதானத்தில், காளஹஸ்தி ஸ்ரீ சுகப்பிரம்மாஸ்ரமத்தைச் சார்ந்த சுவாமி வித்யா பிரகாஸானந்தா கிரி அவர்களின் பகவத்கீதை சமயச் சொற்பொழிவுத் தொடர் 11 நாட்களுக்கு நடைபெற்றது. இதுபோது கர்மயோகத்தின் சிறப்பு விரித்துரைக்கப்பட்டது. சொற்பொழிவின் இறுதி நாளன்று, சுவாமிகளை, தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. ஏ. சுப்பராயலு அவர்கள் பொன்னுடைப் போர்த்தி கௌரவித்தார்.

திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் தி.தி.தே. இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் ஆதரவில் ஸ்ரீபாஷ்யம் அப்பலாச்சார்யா சுவாமிகளின் இராமாயணச் சொற்பொழிவு 11 நாட்களுக்கு நடைபெற்றது. சொற்பொழிவின் இறுதி நாளன்று, ஸ்ரீ சுவாமிகளை தி. தி. தே. செயலாட்சித் தலைவர் அவர்கள் பொன்னுடைப் போர்த்திக் கௌரவித்தார். அதுபோது, திருப்பதி இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா செயலர் திரு. எஸ். லக்ஷ்மணய்யா நாயுடு அவர்கள் பேசுகையில், சுந்தர காண்டத்தினை மலிவு பதிப்பாக தி. தி. தே. வெளியிட வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

**இதிகாச இலக்கியப் போட்டி :**

தி. தி. தேவஸ்தானம் மாநில அளவில், மாணவ மாணவிகளுக்கிடையே

(48-ம் பக்கம் பார்க்க)

# வழிமுறை தெரிந்து வழிபாடு செய்வோம்

மரணம் நெருங்கிவிட்டது. கட்டுப்படுத்திக் கொள்ள முடியாத விக்கல் தொடங்கி விட்டது. கூடவே இருமலும், 'கர், கர்' என செருமலும் தொடருகின்றது. பக்கத்தில் அமர்ந்து அழுகின்றவர் ஒலியோ, வருத்தம் த்வனிக்க அநுசரணையாக அழைக்கின்ற குரலோ ... எல்லாமே எங்கேயோ கிணற்றுக்குள் இருந்து சொல்வது போல மிக மெல்லியதாகத்தான் கேட்கிறது. கடைசிநேரம் நெருங்கி விட்டது என்ற உண்மை ஐயத்துக்கு இடமில்லாமல் நிதர்சனமாக உணருகின்ற பக்குவம் வந்து விட்டது. வீடியோவில் படக்காட்சி பார்ப்பது போல தான் செய்த அக்ரமங்கள், மோசங்கள், ஏமாற்று வேலைகள், பழி வாங்கும் வெறியில் பாதிக்கப்பட்டவர்கள் எனக் கடந்த காலசம்பவங்கள் அழகாகக் கோவையாகத் தொகுக்கப் பெற்று விறுவிறு வென ஓடுகின்றன. "ஐயோ, வாழ்நாளை இப்படி வீணாக்கிப் பாப மூட்டையைப் பயங்கரக் கனத்தில் சுமத்திக் கொண்டு விட்டோமே" என்ற பயமும், நடுக்கமும் அதிர்ச்சியை வெளிப்படுத்துகின்றது. நாக்கு வறண்டு உள்ளுக்கு இழுத்துக் கொள்வது போல ஓர் அவஸ்தை. பேச முயன்றும் வார்த்தை வெளி வரவில்லை. கத்துவதற்கு முயன்றும் மேலண்ணத்தில் நாக்கு ஒட்டிக் கொண்டு புரள மறுக்கிறது. ஒரு சொட்டுத் தண்ணீர் தொண்டையை நனைக்கக் கிடைக்காதா என்று கெஞ்சுகிறது. உயிர் பிரியும் நேரத்தில் பாலே ஊற்றலாம் என உறவினர் காத்திருக்கின்றனர். ஜீவ மரணப் போராட்டம் இழுபறியாக இருப்பதை உணராமலேயே "ம்!இன்னமும் விட்டுப் போக மனசு வல்லே இந்தப்ராணனுக்கு. கொஞ்சம் மண்ணை ஒரு சிட்டிகை போட்டு தண்ணி ஊற்றினா தவிப்பு இல்லாம போய்ச் சேரும்" என்று உறவினர் ஒருவர் விமர்சிக்கிறார். அருளை சம்பாதிக்காத அந்த ஜீவனுக்கு அந்த உலகத்தில் உரிய ஊதியத்தைத் தர எமபடர்கள் வந்துவிட்டனர். ஆன்மாவின் அலறல் ஒருவருக்கும் கேட்கவில்லை. சக்தி முழுதையும் சிரமப்பட்டு ஒன்று திரட்டி, ஒரே மூச்சாகத் தன் ஆசைக்கும், பாசத்துக்கும் பாத்திரமான அருமருந்தன்ன கடைசிமகன் நாராயணனை ஒவெனக் கத்திக் கூப்பிடுகிறார். அந்தக் கத்தலே மிக ஈனஸ்வரத்தில் மெல்லிதாக, குழறலோடு "நா...ம்...ணு" என்றுதான் வருகிறது.

என்ன ஆச்சர்யம்!? "நா" வில் தொடங்கி ணு"வில் முடிவதற்குள் மஹா தேஜஸ்விகளாக ஸ்ரீமந் நாராயண தூதர்கள் புஷ்பக விமான சகிதம் அந்த ஆன்மாவை ஸ்ரீவைகுந்தத்துக்கு அழைத்துச் செல்ல வருகின்றனர். தர்மராஜனின் தூதர்களுக்குக் குழப்பம்! ஒன்றும் புரியவில்லை. மஹாபாபியான் இவன், ரௌரவாதி நரக சிறைக்குச் செல்ல வேண்டி இருக்க, இந்த ஈனனுக்கு வைகுந்த ப்ராப்தியா என மலைக்கின்றனர். "நாராயணா" என ஸ்மரித்த க்ஷணமே அனைத்தும் பாபங்களும் நசித்தன என்ற கூற்றுக்கு "ஸ்ரீமந்நாராயணனையா அழைத்தான்? சிறுவன் நாரணனையன்றோ கூப்பிட்டான்" என்கின்றனர். "அறிந்து சாப்பிட்டாலும், தெரியாது மாற்றிச சாப்பிட்டு விட்டேன் என்றாலும், விஷம் எப்படித் தன் வேலையைச் செய்கிறதோ அப்படித்தான் இந்த நாராயண ஸ்மரணையும்" என்று விளக்கப்படுகிறது. 'அடடா! மகத்தான இந்த உண்மையைத் தெரிந்து கொள்ளாமலேயே, பொருள் பொருள் என பேராசை பிடித்து அருளைப் பற்றிய சிந்தையே இல்லாமல் வாழ்வைப் பாழாக்கி விட்டோமே" எனத்துடிக்கிறது அந்த ஆன்மா.

ஆக-அனிச்சையாக, எந்தப் பலனையும் எதிர்பாராமல் இறைவனை மனதில் ஸ்மரிக்கும்போதே! சுகம்கிடைக்கிறதென்றால் வழி முறை தெரிந்து வழிபாடு செய்தால் என்னென்ன பலன்கள் கிடைக்கும். அதை விளக்க எழுந்ததே ஆகம சாஸ்த்ரங்கள்.

ஜோதிஷ விசாரதை
வி. பிச்சையம்மாள்
பாண்டிச்சேரி-3.

ஆகம நூல்கள் எண்ணிறந்தவை. இவை திருக்கோயில் அமைப்பு எப்படி இருக்க வேண்டும், விக்ரஹங்களின் லக்ஷணம், அவற்றை ஸ்தாபிக்கும் முறைமை,சாந்தி பூஜைகள், ப்ராயஸ்சித்தம் ஹோமங்கள், ஸ்நபனங்கள், நித்ய நைமித்திக உத்ஸவங்கள், ஸம்ப்ரோக்ஷண விதிகள், ஜீர்ணோத்தாரணத்துக்கு உரியவை என இப்படி விரிவாக விளக்கமாகக் கூறுகின்றன.

ஆகமசாரப்படி வழிமுறை மாறாமல், அதன் விதிமுறை தவறாமல் ஆராதிக்கும் அர்ச்சகர்கள் (பட்டாசார்யர்கள், சிவாசார்யர்கள்) மறுமையில் பெறும் ஸ்வர்க்க யோகங்களின் பலனாக அவரது சந்ததியினரும் க்ஷேமமாக விளங்குவர் என்கிறது சாஸ்திரம்.

ஆகமம் கூறும் சில செய்திகள் நமக்குப் பயன் தருவனவாகும் என்பதால் இங்கே குறிப்பிடுகிறோம்.

நாம் ஆராதிக்கும் மூர்த்திகளை பத்து விதங்களில் நிர்மாணிக்கலாம் என்று சில்பசாஸ்த்ரம் கூறுகிறது.

ஹோமாக்னி குண்டத்தின் நடு காளி ஸ்வரூபம். அமைதியை விழை வோர் இந்த இடத்தில் ஹோமம் செய்ய வேண்டும். அக்னி குண்ட கிழக்கு ''கராளி''யின் இடம். இது ஜய விஜயத்தை விரும்புவோர்க்கு: தென் கிழக்கில் ரோகநாசனி "ஸுமனா''. அது ஆரோக்கிய அபி விருத்திக்கு; மேற்கே வசியம் குறித்த பணிக்கு, அந்த இடத்தில் வ்யா பித்திருப்பவள் "லோஹிதா''. சத் ருஸம்ஹாரணம் போன்ற மாரணத் துக்கு வடபகுதியில் ஹோமம் செய்ய வேண்டும். அங்கு சித்தி தர இருக் கும் தேவதை "தூம்ரா''

மனோபீஷ்ட சித்திக்கு வடமேற்கு ஆதிபத்யம்:- "ஸ்புலிங்கினீ''. அணிமா, மகிமா, லகிமா போன்ற அஷ்டமா சித்திகளைத் தர "விஸ்வ ரூபி''. ஹோமாக்னி குண்டத்தின் வடகிழக்கில் ஹோமம் செய்வோருக் காக அருள்மாரி பெய்ய வியாபித் திருக்கிறாள்.

பகவானை ஆராதிக்கும் ஆசார்யர் கள் :- தீர்த்தமாடாமலும், திருமண் காப்பு, பவித்ரம், உபவீதம் முதலி யன தரிக்காமலும், ஒரே ஆடையுட னும், கிழிந்த ஆடையுடனும், மடி வஸ்த்ரம் இல்லாத–பழைய அழுக் காடையுடனும், ஈர வஸ்த்ரத்துட னும்; நீலவஸ்த்ரம், கறுப்பு வஸ்த் ரத்துடனும், வருத்தத்துடனும், வரும் ஸேவார்த்திகளிடமிருந்து என்ன பிரயோஜனத்தை அடைய லாம் என்ற சிந்தனையுடனும், தண்ட கடனே என்றும் அர்ச்சிக்கவோ, ஆராதிக்கவோ கூடாது. இப்படிச் செய்ய நேர்ந்தால் கிரஹத்தில் தரித் ரம் தாண்டவமாடும். எவ்வளவு வந் தாலும் ஓட்டைப்பாத்ர நீர் போல மனநிறைவோ, மகிழ்வோ இல்லா மல் க்லேசத்துக்கும், பாபத்துக்கும் பாத்ரர்களாகிவிடுகிறார்கள். இந்தப் பாப சமனத்துக்கு புதன் கிழமை தொடங்கி புதஹோரை நேரமாக எட்டு நாட்களுக்கு அஷ்டாக்ஷர மஹாமந்த்ர ஜபத்தை ஸ்ரீ விஷ்ணு காயத்ரி மந்த்ரத்துடன் ப்ரதி தினம் 1008 முறை ஜபிக்க வேண்டும்.

அர்ச்சகர்கள் பகவதாராதனம் பண் ணுவதற்கு முன்பாக பூதசுத்தியிலி ருந்து மந்த்ர ந்யாஸம் வரை முடிக்க வேண்டும். இந்த வழிபடு முறையை அலக்ஷ்யம் செய்யும் அர்ச்சகர்களின் சந்ததி நாசம் உறும் என்பதோடு அவமானகரமான ஸ்திதிக்கு ஆளா வார்கள்.

நித்ய பூஜா முறைகளில் போதிய பயிற்சியோ, ஞானமோ இல்லாத வரை அர்ச்சகராக நியமிப்பது பாபத் துக்கு அழைப்பு விடுப்பது போலா கும். அம்மாதிரி செய்தால், அந்த தோஷபரிஹாரத்துக்கு ஸஹஸ்ர ஸ்நபனமும், ஸம்ப்ரோக்ஷணமும், உத்ஸவமும் செய்யவேண்டும். இல்லை யென்றால் அந்த ஆலய ஸாந்நித்யம் படிப்படியாகக் குறைந்து பிரார்த் திக்க பக்தர்களே வராத க்ஷீண நிலை ஏற்பட்டு பாழடைந்த வெறுங்கோயி லாகிவிடும்.

பகவானுக்கு புஷ்ப கைங்கர்யம் செய்பவர் வைகுந்த போகத்தை அடைவர்.

திருவிளக்குக் கைங்கர்யம் செய் வோர் செல்வத்தையும் சந்ததி விருத் தியையும் அடைவர்.

பசுஞ்சாணியால் ஆலயத்தை சுத்தி செய்பவரின் பாபங்கள் கழுவப்படு கின்றன.

ஆகம முறைப்படி ஆராதிக்கும் நல்ல ஆசார்யனின் மனம் மகிழும் படி, அவரின் புத்ரியின் திருமணத் துக்கு என, நிறைவோடு தனம்-தான் யம்-வஸ்த்ரம்-தீபம்-வாழை மரங்கள் தானம் அளிக்கும் பக்தருக்கு லக்ஷ்மி கடாக்ஷம் கிட்டும்.

பகவானுக்கு என நந்தவனம் அமைத்துப் பராமரித்து உதவும் பக் தனுக்கு சர்மரோகம் நிவ்ருத்தியா கிறது.

பகவானுக்குப் பிரதிதினம் துளஸி மாலை, திருமஞ்சனத்துக்கான பசும் பால், தீபத்துக்கான நெய் அல்லது எள் நெய் முதலியன அளித்து வரும் பக்தரின் ஸம்ரக்ஷணையைப் பக வானே எடுத்துக்கொள்கிறார்.

எந்த பக்தன் தனது குடும்பத்தின் க்ஷேமத்துக்காக என்று கவனிப்பது போல ஒரு ஆலயத்தின் ஸம்ப்ரோ க்ஷணத்தை - கும்பாபிஷேகத்தை பக்தி சிரத்தையுடன் கிரமப்படி செய்து முடிக்கின்றானோ அவனும் அவனது சந்ததியாரும் அந்த ஆல யத்தில் நடைபெறுகின்ற அனைத்து அர்ச்சனை போன்ற பூஜா விசேஷங் களிலிருந்தும் ஒரு பகுதியை அருள் நிதியாக–வைப்பு நிதியாகப் பெறுவ தோடு, மறுமையில் அவனருளில் திளைக்கும் ஆனந்தத்தை அடைகிறார் கள்.

ஆலயப் பணிக்கென உள்ள பொருள்களைக் கவருபவனும், ஆலய நிதியைக் களவாடுபவனும், ஆலய சொத்துக்களை சொந்த உபயோகத் துக்குப் பயன்படுத்துபவனும் சொல் லில் விவரிக்கமுடியாத துயரங்களை மறுமையில் அனுபவித்து, பல பிறவி கள் எடுத்து தரித்ரவான்களாகவும் நோயாளிகளாகவும் உழலுவார்கள்.

அர்ச்சகர்களின் ஆசார அனுஷ்டா னங்கள், காலந்தவறாத பூஜைகள், நெறிபிறழாத வழிபாட்டு முறைகள் மற்றும் நித்யோத்ஸவ, பக்ஷோத் ஸவ, மாஸோத்ஸவ, வார்ஷீகோத் ஸவங்களினாலும்; பருவம் பார்த்தும் அபசாரம் உணர்ந்தும் செய்கின்ற ஸம்ப்ரோக்ஷண - கும்பாபிஷேக, ப்ராயஸ்சித்தங்களினாலும் ஆலய மூர்த்தியின் சக்தியும், வரப்ரஸாத பலமும், ஸாந்நித்யமும் ஆச்சர்யம் தரத்தக்க அளவில், அபரிமிதமாகப் பொங்கிப் பிரவகித்து மக்களையும், நாட்டையும் காக்கும்.

# முருகன் பெருமை



முருகு என்றால் இளமை. முருகன் எவறால் என்றும் இளமையோடு இருப்பவன். இச்சொல்லுக்கு அழகு, இனிமை, மணம், மகிழ்ச்சி, ஞானம், தெய்வத்தன்மை என்ற பிற பொருள் களுமுண்டு, கூட்டாகவும், தனித் தனியாகவும் இந்த நல்லியல்புகளைக் கொண்டவன் முருகன்.

முருகனுக்கு வேறு பல்லாயிரம் திருநாமங்கள் உள்ளன. எந்த தெய் வத்திற்கும் அருள் மாட்சி காரண மாக பலப் பல பெயர்கள் அமையும். அவ்வாறே முருகனுக்கும் ஆகும்.

முருகன் அடியார்களில் சிறந்தவர் அருணகிரிநாதர். அவர் சொற்படி முருகன் சுரபூபதி-நம் குரு-அவன் கழல் போற்றி (பற்றி) உய்யலாம்-அவன் தன் அடியாரைக் காக்கும் விரதம் கொண்டவன் - சிவஞானோப தேசிகன்-(சிவனுக்கு பிரணவ விளக் கம் சொன்னவன் (அ) சிவஞானத்தை தன் அடியார்க்கு உபதேசிக்க வல்ல வன்)-அவன் சரணம் (பாதம்) வேதம் கமழும் சரணம்-முருகா என்றால் அநுபூதி பெற்று உய்யலாம்-முத்தமி ழால் வைதாரையும் (வைதபோழ்தே) வாழ்விப்பவன்-(நாலுகவித் தியாகன் முருகன்)-திருமாலின் திருமருகன்-தன் பக்தர்களின் பிறவிக் கடலுக்கு அணையிட்டு இனி பிறவி தராது காப் பவன்-பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய் தித்திக் கும் அமுது முருகன்-ஓங்காரத்து உள் ளொளிக்குள் இருப்பவன் முருகன்-நீலவள்ளியின் முற்றாத தனத்திற்கு இனிய பிரான் முருகன்-(வள்ளி என் பது பக்குவமடைந்த ஜீவாத்மா; முற்றாத தனம் (முலை) என்பது தள ராத பக்தி நிலை ஆகும். வள்ளியைப் போல் பக்குவநிலை அடைந்த அடி யாரின் தளராத பக்தி நிலக்கு இரங்கி (இறங்கி) தானே தேடி வந்து அருள் புரிந்து ஆட்கொள்ளும் வள்ளல் முருகன். இதுவே வள்ளியைத் தேடி வந்து முருகன் மணம் புரிந்த வர லாற்று இரகசியம்)-மன்மதனை ஞானக்கண்ணால் அழித்த சிவனுக்கு இனியன்; ஞான பண்டிதன் முருகன்-அமராவதிக்கு காவலன்-தேவர்குல சேனாபதி-'தேவசேனா' என்னும், இந் திரன் மகள், தேவலோக இளவரசி தெய்வானை அம்மைக் கணவன்-சேனாபதி என்றால் படைத் தலைவன்-முருகன் ஆறுபடை வீட்டுத் தலை வன்-யான்தான் என்ற அகந்தை கெட்டார்க்கு மட்டும் அவன் அருள் வெளிப்படும்-செந்தமிழ் நூல் விரித் தோன் முருகன்-தேவர் யாவர்க்கும் மேலானவன் முருகன்-பெம்மான் முருகன் பிறவான் இறவான் (என் றும் குமாரன்) என்று பாடல் பெற்ற வன். குமார என்றால் உலக மாயை யைப் போக்கிக் காப்பவன். குரு என் றால் ஆசான்; ஆணவ அறியாமை இருளைக் காப்பவர்.

முருகனின் பிற பெயர்களில் சில: கார்த்திகேயன்-சரவணன்-விசாகன் குருபரன்-வேலவ-கந்தன் (பகைவரின் வலிமையை வாங்கிக் குன்றச் செய் பவன்) தப்பிரான்-சேவற்கொடி யோன்-தண்டபாணி-செந்தில் நாதன்-குஞ்சரி மணாளன்-குறத்தி மணாளன்-வள்ளி நாயகன்-சுப்ரமண்யன்-கும ரேசன்-குகன் (ஆன்மாக்களின் இதய குகையில் பக்தி வசப்பட்டு இருப் பவன்)-குருநாதன்-சண்முகன் அதா வது ஆறுமுகன் (ஆறுதலைத் தரு பவன்)-கதிர்வேலன்-சுவாமிநாதன்-சிவபாலன்-சிலை பாலன்-காங்கே யன்-குமரகுரு-தணிகாசலன்-கடம் பன்-செங்கோடன்-மயில் வாகனன்-கதிர் காமன்-சேந்தன்-தேவ சேனா பதி-உமைபாலன்-ஞானசரன்-மயில் வீரன்-வயலூரன்-முத்துசாமி-கிருபா கரன்-விநோதன்-கிரிவாசன்-சோலை மலைக்குமரன்-சோலை மலைக்கிழவன்-(கிழவன்=தலைவன்) தெய்வ சிகா

திரு. S. G. சேஷகிரி-கோயம்புத்தூர்.

மணி-இப்படி ஒரு நாமம் ஒருருவம் ஒன்றிலார்க்கு ஆயிரம் திருநாமம் சூடி, பாடி, மகிழ்தல் மரபு. வேத நூல் இன்னும் விரித்துக் கூறும்.

இந்தப் பெயர்களுள் எல்லாம் சிறந்த பெயர் முருகன் என்பதாகும். 'முருகன் குமரன் குகன்' என்ற அநு பூதிப் பாடலிலும்-'முருகா எனும் நாமங்கள் நமக்குத் துணை' என்ற அலங்கார பாடலிலும் முன் மொழியப்பட்ட பெயர் முருகன் என்பதும், அரும் பெறல் மரபின் பெரும் பெயர் 'முருக' என்று நக் கீரர் சொல்வதும் இதனைச் சால விளக்கும்.

இன்பத் தேன்மொழியாம் தமிழில் வல்லினம் மெல்லினம் இடையினம் என மூன்று இன எழுத்துக்கள் உள. முருகு என்பதில் இம்மூன்று இன எழுத்துக்கள் அமைந்துள்ளன. இது தமிழ் மொழிச் சிறப்பாகும்.

இந்து சமய மையம், வேதத்தின் முதல் சொல் 'ஓம்' எனும் பிரணவம் ஆகும். கீதையில் கண்ணன் 'பொரு

ளுள்ள சொற்களில் ஓரெழுத்தான பிரணவம் நான்' என்கிறுர். அ, உ, ம என்ற மூன்று மூலாதார எழுத்துக் களின் கூட்டு 'ஓம்' என்னும் ஒரெ ழுத்து மந்திரம். இதில் அ-ஆக்கலே யும், உ-காத்தலேயும், ம-அழித்தலே யும் (பிரம்மா, விஷ்ணு, ருத்திரன்- இவர்களின் முத்தொழில்கள்) குறிப் பனவாகும். முருகு என்பதில் உ- காத்தல் தொழில் ஓசை உள்ளது. பக்குவம் பெற்ற ஆன்மாக்களைக் காப்பவன் முருகன். எனவே முருகா எனும் ஒரு நாமம் மற்ற எல்லா பிற நாமங்கள் ஒன்று சேர்ந்து நிற்கும் கூட்டணி நாமங்களுக்கு இணையான தாகும். முருகன் காக்கும் கடவு ளாய் நாட்டிலும், காட்டிலும் (சோலே) மலேகளிலும் (குன்று தோராடல்) கடற்கரையிலும் எங்கு மாய் ஆறுபடை வீடுகள் எனக் கொண்டு பிரணவ ரூபியாய் இருந்து (பக்குவப்பட்ட ஆன்மாக்களைத் தேடிச் சென்றும்) அருள் புரிகிறுன்.

அடுத்து முருகன் அருள் பெற்ற நக்கீரர் வாக்கில்: அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும் முருகா என்று ஓதுவார். முன்-அதா வது அஞ்சுதல் (யமபயம்) ஏற்பட் டால் ஆறுதல் (அது ஒழிய உபாயம்) தேவை; பணமுடை ஏற்பட்டால் பண உதவி தேவை போல. அதற்கு பணம் உடையானை அண்டிஞல் பண உதவி கிட்டும். அதுபோல் ஆறுதலே (ஆறுமுகம்) உடையவனைச் சரண டைந்தால் ஆறுதலேப் பெறலாம் (யமபயம் நீங்க அநுபூதி பெறலாம்) முருகன்; முருகா எனும் நாமாவின் பெருமை இவை. (அநுபூதி=மெய் யுணர்வு).

சிவம் தன் தொன்மை பஞ்சமுகங் களுடன் கீழ்நோக்கும் முகம் ஒன்று கொண்டு விளங்கும் மூர்த்தமே ஆறு முகம் எனும் முருகன் உருவமாகும். 'படைத்தலேவரில் நான் கந்தன்' என்பது கீதையின் கண்ணன் (விஷ்ணு) வாக்கு.

'நமசிவாய' எனும் பஞ்சாட்சர மந்திர ஐந்து எழுத்துக்களுடன் பிரணவமாகிய 'ஓம்' என்ற ஓர் எழுத்து சேர, இவை ஆறு ஆகிய மந்திரமே முருகன் தத்துவங்களில ஒன்ருகும். தமிழில் முருகா என்னும் நாமம் போல வடமொழியில் குமார எனும் நாமம் சிறப்பானது. 'குமா ராய நம' என்ற ஆறெழுத்து மந் திரம் கூறி இந்த பிரணவ விளக் கத்தை முருகனிடம் கேட்கப் பெற் ருர் சிவபிரான். எனவே சிவபிரான் உகந்த 'குமார' நாமம் சிறப்புடை யது.

முருகப் பெருமானின் அருள் பெற் றவர் பலர். எனினும் அவரிடம் பிரணவ மந்திர உபதேசம் பெற்றவர் மானிடருள் அருணகிரியும், முனி வருள் அகத்தியர் மட்டுமே ஆவர். தேவரில் பிரணவத்தின் விளக்கம் முருகன் சொல்லக் கேட்டு மகிழ்ந் தவர் சிவபெருமான். எனவே தகப் பனுக்கு பிரணவப் பொருள் சொன்ன தால் 'தகப்பன் சாமி' (சுவாமி நாதன்) என்ற பெயரும் பெற்ருர் முருகன்.

வடநாட்டில் சுப்ரமண்யரை பிரம்ம சாரி கடவுளாகவும்; கணபதியை இரு மனைவியருடனும் வணங்குகின் றனர்.

இத்துடன் முருகன் திருவருட் பெருமை விளக்கம் முற்றுப் பெற்றது என்று முடித்துச் சொல்ல முடிய வில்லே.

*'ந சக்யம் விஸ்தராத் வக்தும் வர்ஷகோடி சதைரபி'*

'நூறு கோடி வருடங்களுக்கும் இடைவிடாது சொன்னுலும் முருகப் பெருமானின் மகிமையை முடிவுறக் கூற முடியாது.' என்று கபிலேமலே நாதர் புவனேஸ்வரியாம் சக்தி தேவி யிடம் கூறுகிறுர்' என்பது வடநூல் கந்தபுராண வாக்கு.

卐



மருதமலே முருகன் கோயில்
திரு. முத்துராமன், கோவை

# மறந்து உய்வனே?

உலகில் உள்ள மக்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். மிருக குணங்களோடு பொருந்தி காமம், குரோதம், மதம், போகம், மாத்சர்யம் போன்ற பொல்லாத குணங்களோடு வாழ்பவரை மனிதரில் மிருகம் என்றும், அன்பு, பாசம், நேசம்என்று மானிடப் பண்புகளில் திளைத்து வாழ்பவர்களை மனிதரில் மனிதர் என்றும், அருள், கருணை, ஆன்மநேய ஒருமைப்பாடு, இடையறு இறையன்பு, 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' போன்ற உயர்ந்த பண்புகளோடு வாழ்பவர்களை மனிதரில் தெய்வம் என்றும் மூன்று வகையாகக் கொள்ளலாம். முதல் பண்புகளை விட்டொழித்து இரண்டாம் வகையிலிருந்து உயர்ந்து தெய்வீக நெறியில் நின்று ஆன்மீக வாழ்வில் திளைப்பவர்களையே மனிதரில் தெய்வமெனப் போற்றலாம். இத்தகையோர் சொல், சிந்தனை, அனைத்தும் பரம்பொருளுக்கு சமர்ப்பணம் செய்திட்டு எல்லா உயிரையும் தம்முயிர் போல் எண்ணி வாழ்வர்.

இத்தகு மேன்மக்கள் இடையறுது இறையருளோடும் ஆன்ம நெறியோடும் இருக்க விழைவர். ஏனெனில் விளக்கு அணைந்தவுடன் தோன்றும் இருள் போல் அவர்கள் உள்ளத்தில் இறையருள் மாறினால் அல்லதுமறைந்தால் உலகியலின் ஆசாபாசங்கள் அவர்களைப் பின்னிப் பிணைத்துக் கொள்ளும் அவற்றிலிருந்து மீளவும் எப்போதும் இறவாத இன்ப அன்பு பெறவும் அவர்கள் இறையனுபவத்தினையே பெரிதும் விரும்புவர்.

மன்னு இம்மனிசப் பிறவியை நீக்கித்
தன்னாக் கித்தன்இன் னருள்செய்யும்
தலைவன்
மின்னார் முகில்சேர் திருவேங்
கடம்மேய
என்னானை என்அப்பன் என்னெஞ்சில்
உளானே

என்பார் திருமங்கையாழ்வார்.

மாணிக்கவாசகரும் 'இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்று தன் உள்ளப் பாங்கை வெளிப்படுத்துகின்றார்.

இறைவனது உண்மையான அடியவர்கட்கு மகிழ்வு கிட்டுவது எதனாலெனின் இறைவனை தூய மனது கொண்டு ஏத்தி வழிபடுவதால் தான். தொழாத நாட்கள் எல்லாம் துன்பம் நிறைந்த நாட்களாகும்.

'' துன்பம் நும்மைத் தொழாத
நாள்கள் என்பாரும்
இன்பம் நும்மை யேத்து நாள்கள்
என்பாரும்
நும்மின் எம்மை நுழையப் பணியே
என்பாரும்
அன்பின் ஆரூர் ஆதிரை நாளால்
அதுவண்ணம்''

என்று அடியவர்கள் அடையும் இன்ப நிலையைப் பற்றி திருநாவுக்கரசர் பெருமான் வெளிப்படுத்துகிறார். ''பிறப்பு, இறப்பு, மூபபு, நோய் ஆகியவற்றை ஒழித்து அதற்கு மேல் மிக்க சுகமான அனுபவத்தை அடைந்தானாகிலும், உலகளந்த பெருமானுடைய திருவடிகளைத் துதிக்காத காலத்தில் உள்ள மறப்பு எல்லாம் துக்கம் என்றல்லாது வேறு எவ்வகையில் நினைக்க முடியும்?'' என்று வினவுகின்றார் பெரிய திருவந்தாதியில் நம்மாழ்வார். ஒரு பதிகம் முழுவதும் அப்பர் பெருமான் ''பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே'' என்று இறைவனைப் போற்றிப் புகழ்வதின் அவசியத்தை எடுத்துக் காட்டுகிறார். ஏனெனில்,

'' என்னி லாரும் எனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யானொரு
வன்னுளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம்
போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்பர்
ஈசனே

என்று அப்பர் பெருமான் பாடுவதிலிருந்து மெய்யடியார்கள் புறத்தே தோன்றும் இறையை அகத்தே கண்டு இன்புற்றவர்கள் எனத் தெளியலாம். நலம் விரும்பும் வடிவில் திருமேனி கொண்டு ஆலயங்களில் வீற்றிருந்து அருள்பாலிப்பவன் பரம்பொருளேயாகும். அவனை வணங்கி வழிபட்டால் எளிதில் உய்வடையலாம். ''தஞ்சமான தந்தை ஆகியும் (நன்மை செய்ய), தாய் ஆகியும் (அன்பு செலுத்த) இவ்விரண்டோடு தானுமாகியும், அவை அல்லாதவனாகியும், சுருங்குதலே இல்லாத ஞானமுடைய நித்தியர்களுடைய கூட்டத்திற்குத் தலைவனாகியும், மும்மூர்த்திகளுக்கு மூலமாகியும் உள்ள இறைவனை, உலக மக்களாகிய நீங்கள் இறைவனது திருமேனியைக் கண்டு அஞ்சி எல்லையற்ற பரம்பொருளாய் இருப்பவன் அவன், திருமேனி கொண்டு எழுந்தருளியிருப்பவன் இவன் என்று இருவடிவங்களும் வெவ்வேறு என்று சந்தேகம் கொள்ளாதீர்கள்; நெஞ்சினால் நினைக்கப்படுகின்ற வடிவுடையவன் எவனோ, அந்த

டாக்டர் ஆர். கோபாலகிருஷ்ணன்
சென்னை-5.

இறைவனே அளவிறந்த கடல் போன்ற இயல்பையுடையவனாவான்'' என்று நம்மாழ்வார் விளக்கம் தருகின்றார்.

சென்ற நாள் செல்லாத செங்கண்-
மால் எங்கள் மால்
என்ற நாள் எந்நாளும் நாள்ஆகும்—
என்றும்

# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி,**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

இறவாத எந்தை இணையடிக்கே
ஆளாய்
மறவாது வாழ்த்துக என்வாய்''

என்பது மூன்றாம் திருவந்தாதியின் திருக்கூற்று.

காதலனைப் பிரிந்த காதலி வாடி வருந்துவது போன்றே இறை நினைப்பை இழந்த அடியவர்கள் வருந்துவார்கள் என்பது அவர்கள் தாம் பாடல்களிலிருந்து தெரிய வருகிறது. ''பனை போன்ற துதிக்கையையும் மூன்று மதங்களையும் உடைய யானையை உரித்தவனும், தன்னை உள்ளன்போடு தியானிப்பவர் மனத்தை எப்போதும் தனக்குஇருப்பிடமாகக் கொண்டு வீற்றிருப்பவனும், அவரவர் நினைக்கும் எல்லா வடிவமும் கொள்பவனுமான சிற்றம்பலத்திலே கூத்தாடும் பெருமானை ஒரு தினையளவு நேரமும் நினையாது மறந்தால் நான் உய்வடைவேனோ?'' என்று அப்பர் பெருமான் கேட்கின்றார். இதே கருத்து கொண்ட பாடலை திருமங்கையாழ்வாரும் பாடுகின்றார் ;

'' எஞ்சா வெந்நரகத்தழுந்தி
நடுங்குகின்றேற்கு
அஞ்சேலென் றடியேனை யாட்கொள்ள
வல்லானை
நெஞ்சே நீநினையா திறைப்பொழுதும்
இருத்திகண்டாய்
மஞ்சார் மாளிகைசூழ் வயலாலி
மைந்தனையே''

ஃ ஃ ஃ



# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M.S.c., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்

**அத்தியாயம்—16.**

**பகுதி—8.**

நம்மில் பெரும்பாலோரது வாழ்க்கையை பகவான் அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

ஆசா பாச சதைர் பத்தா:
காமக்ரோத பராயணா: |
ஈஹந்தே காமபோகார்த்த
மன்யாயேனார்த்தஸஞ்சயான் ||
(16-12)

'நூற்றுக் கணக்கான ஆசைக் கயிறுகளால் கட்டப்பட்டவர்களாய், காமக்ரோத வசப்பட்டவர்களாய், காம போகத்தின் பொருட்டுச் செல்வக் குவியல் தேட முயலுகின்றனர்.'

நம் ஒவ்வொருவரையும் தனித் தனியே கூப்பிட்டு 'உங்கள் ஆசைகள் அனைத்தும் இப்பொழுது பூர்த்தி செய்யப்படும். நீங்கள் இப்பொழுது உங்கள் ஆசைகளை வரிசைப் படுத்திக் கூறுங்கள்,' என்று தேவதை ஒன்று கூறுவதாக வைத்துக் கொள்வோம். நம் மனதில் படலம் படலமாக எத்தனை எத்தனை ஆசைகள் தொடர்ந்து எழும்? அப்பப்பா! அவற்றிற்கு ஒரு கணக்குண்டோ? வயது தொண்ணூறு ஆனாலும் பேத்திக்குப் பிறந்த கடைசிக் குழந்தையிடம் உள்ள பாசம் கொஞ்சமும் குறையக் காணோம்! அந்தக் குழந்தைக்கு ஏதாவது வியாதி வந்துவிட்டால் தனக்கே அந்த வியாதி வந்தது போல அரற்றல், அழுகை. இவ்வளவுக்கும் வீட்டில் இந்தக் கிழவனை எவரும் தீண்டுவதாக இல்லை!

'ஒவ்வொரு ஆசையும் நம்மை உலகத்தோடு பிணைக்கும் கயிற்றுக்கு நிகர். எத்தனை ஆசைகள் நம்மிடம் உள்ளனவோ அத்தனை பாசக் கயிறுகளால்நாம்கட்டப்பட்டிருக்கிறோம்' என்று பகவான் கூறுகிறார். கொஞ்சம் கண்களை மூடிச் சிந்தித்துப் பாருங்கள்! இது முழுக்க முழுக்க உண்மை தானே!

ஆசைகள் நிறைவேற நாம் படாத பாடு படுகிறோம். ஆனால் ஆசைகள் நிறைவேறும் பாதையில்தான் எத்தனை தடைகள், எத்தனை இடையூறுகள்! ஏன்? அதுவே இயற்கையின் நியதி. தடைப்படுத்தப்பட்ட ஆசைகள் கோபமாக மாறுகின்றன. ஆசையும் கோபமும் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகள். எப்பொழுதும் இவை இரண்டும் இணைந்தே செல்லும். ஆசை இல்லாத இடத்தில் கோபம் இருக்க வழியில்லை.

நம் அத்தனை பேருடைய அன்றாட வாழ்க்கையினை ஒரேவரியில் அடக்கிக் கூறி விடலாம். "காம போகத்தின் பொருட்டு பொருள் சேர்த்தல்." இப்படி நம்மைப் பற்றிப் பகவானே கூறுகிறார். பொருள் சேர்ப்பதில் இரண்டு வழிகள் உண்டு. ஒன்று நியாயமான வழி, மற்றது அநியாயமான வழி. ஆசையின் வயப்படாதவர்கள் நியாயமான வழியில்பொருள் சேர்ப்பர். அவர்கள் லஞ்சம், ஊழலில் ஈடுபட மாட்டார்கள். மாறாக பேராசை வயப்பட்டவர்கள் லஞ்சம் ஊழலில் திளைத்துப் பெரும் பொருளீட்டுவர். அதனால் அவர்கள் அடையும் மனக்கிலேசம், உடல் வியாதிகள் மற்றும் சிக்கல்களும் அநேகம்! ஒரு வேளைக் கஞ்சி குடித்தாலும் மன நிறைவுடன், அமைதியுடன், மகிழ்ச்சியுடன் குடிக்க வேண்டும், அநியாயமான வழியில் பொருள் சேர்ப்பவரிடம் இத்தகைய அமைதியைக் காணவே முடியாது. அவர்களது உள்ளம் அச்சத்தின் இருப்பிடம், உடலோ பிணிகளின் பிறப்பிடம்.

உலகாயதத்தில் மூழ்கிய மக்களை ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர் மிக அழகாகக் கீழ்க் கண்டவாறு படம் பிடித்துக் காட்டுகிறார்.

"கொடிய துன்ப துயரங்களை மிகுதியாக அனுபவித்தாலும் லௌகிகர்களுக்கு நற்புத்தி உண்டாவதில்லை. அநேகரால் ஏமாற்றப்பட்டபோதும், ஆபத்துக்கள் அநேகம் வந்துற்ற போதும் லௌகிகர்கள் கஷ்டப்படுகிறார்கள். அடுத்த கணத்தில் எல்லாவற்றையும் மறந்து உலக விஷயங்களையே தேடி அலைகிறார்கள். ஒருவனது மனைவி இறந்து விடுகிறாள், அல்லது அவனை விட்டு ஓடி விடுகிறாள். ஆனாலும் அவன் திரும்பவும் விவாகம் செய்து கொள்ள முற்படுகிறான்! அல்லது அவனது குழந்தை இறந்து விடுகிறது, கதறி அழுகின்றான்! பெரிதும் துக்க சாகரத்தில் ஆழ்ந்து வருந்துகிறான் என்றாலும் மறுகணத்தில் அந்தக் குழந்தையின் நினைவே இல்லாது அவன் வாழ்க்கை நடாத்துகிறான்! குழந்தையைப் பறிகொடுத்த தாய் துக்கத்தால் சோகமாகி விடுகின்றாள் ஆனால் சிறிது நேரம் கழித்து அவள் தன் நகைகளைச் சரிபடுத்துவதிலும், நல்ல புடவைகளை உடுத்துவதிலும், வாசனை சோப்பைத் தேடுவதிலும் ஈடுபடுகிறாள். பெண் குழந்தைகளின் விவாகங்களாலும் பெற்றோர்கள் தரித்திர தசையை அடைந்து விடுகிறார்கள்.

பின்னும் அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்து கொண்டுதான் இருக்கின்றன. இவர்கள் வழக்கு வியாக்கியங்களில் சகல பொருள்களையும் இழந்துவிட்டு வருந்தினாலும் மேலும் வழக்கு சம்பந்தமாக நீதி ஸ்தலத்திற்குப் போவதை நிறுத்துகிறதில்லை. குழந்தைகளைக் காப்பாற்ற வழியில்லாமற் போனாலும் ஒவ்வொரு வருஷமும் குழந்தைகளைப் பெற்றெடுக்கத் தவறுவதில்லை. என்ன ஆச்சரியம்!''

இதமத்ய மயா லப்தம்
இதம் ப்ராப்ஸ்யே மனோரதம் |
இதமஸ்த்தமபி மே
பவிஷ்யதி புனர்தனம் ‖ (16-13)

'இன்று இது என்றால் அடையப்பட்டது; இவ்விருப்பத்தை நிறைவேற்றுவேன். இது இருக்கிறது. மேலும் எனக்கு இச் செல்வம் வந்து சேரும்'

அஸௌ மயா ஹத: சத்ருர்
ஹனிஷ்யே சாபரானபி |
ஈச்வரோ ஹ மஹம் போகி
ஸித்தோऽஹம் பலவான் ஸுகீ ‖
(16-14)

'அப்பகைவன் என்னால் கொல்லப்பட்டான்; மற்றவர்களையும் கொல்லுவேன். நான் ஆளுபவன்; போகத்தை அனுபவிப்பவன், காரிய சித்தன், வலிவுடையவன், இன்பமடைபவன்'.

ஆட்யோ ऽபிஜனவானஸ்மி
கோऽன்யோऽஸ்தி ஸத்ருசோ மயா |
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய
இத்யக் ஞான விமோஹிதா: ‖
(16-15)

'செல்வம் படைத்து நான் உயர் குலத்தவனாயிருக்கிறேன், எனக்கு நிகரானவன் வேறு எவன் இருக்கிறான்? யாகம் செய்வேன், தானம் கொடுப்பேன், மகிழ்வடைவேன் **என்று அக்ஞானத்தில்** மயங்கினவர்கள்'.

அநேக சித்த விப்ராந்தா
மோஹ ஜால ஸமாவ்ருதா: |
ப்ரஸக்தா: காமபோகேஷு
பதந்தி நரகேऽசுசௌ ‖ (16-16)

'பல எண்ணங்களில் குழப்பமடைந்தவர்கள், மோக வலையில் மூடப்பெற்றவர்கள், காம போகங்களில் பற்றுடையவர்கள் பாழ்நரகில் வீழ்கின்றனர்.'

மேற்காணும் நான்கு சுலோகங்களில் உலகாயதவாதிகள் எப்படி எப்படி எண்ணுகிறார்கள், திட்டம் போடுகிறார்கள், மற்றும் செயல்படுகிறார்கள் என்பது விளக்கப்படுகிறது.

இருப்பதை வைத்துக் கொண்டு திருப்தி அடைவது என்பது தெய்வ இயல்பு ஆகும். நம்மில் எத்தனை பேரிடம் போதுமென்ற மனம் இருக்கிறது. அடுத்த வீட்டுக்காரரைப் பார்த்துப் பார்த்தே நாம் மனம் புழுங்கி மாய்கிறோமே! அடுத்த வீட்டுக்காரரைப் பார்ப்பதில் தவறில்லை. நம்மைவிட வறியவர்களைப் பார்த்து, "இறைவா! அவர்களைவிட எங்கள் நிலை எவ்வளவோ மேலானது. அதற்கு நாங்கள் உனக்கு நன்றிசெலுத்துகிறோம்.'' என்று நாம் எண்ணினால் அது போற்றற்குரிய தாகும். ஆனால் நாம் அப்படிச் செய்வதில்லை. ஏன்? நமது மனம் நம்மை அப்படிச் செய்ய விடுவதில்லை. அது தான் சாத்தானின் வேலை.

சிறிது பொருள் சேர்ந்து விட்டால், சிறிது புகழ் வந்துவிட்டால், உடனே கூடவே அதுபற்றிய கர்வமும் வந்து விடுகிறது. பணம் மனிதனை எப்படியெல்லாம் பேச வைக்கிறது. எத்தனை தீய குணங்கள் ஒருவனிடம் இருந்தாலும் அவனிடம் பணம் இருந்துவிட்டால் உலகத்தவர் அவனை எப்படியெல்லாம் புகழ்கிறார்கள்.

அசுர இயல்புடையவர்கள் அநியாய வழியில் பொருள் சேர்ப்பது மட்டுமல்லாமல் அந்தப் பணத்தால் மேலும் பல பாபச் செயல்களைச் செய்யத் திட்டம் போடுவார்கள். பணத்தைக் கொடுத்து தங்களைச் சுற்றி அடியாட்கள் பலரை வாடகைக்கு வைத்திருப்பார்கள். தங்களுக்குப் பிடிக்காதவர்களை ஒழித்துக் கட்ட இந்த அடியாட்களை அவர்கள் பயன்படுத்துவார்கள். அவர்கள் என்ன சொன்னாலும், செய்தாலும் அதற்குப் பிறர் 'ஆமாம்' சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். பணத் திமிர் அவர்களது சொல், செயலில் யாண்டும் காணப்படும். 'எனக்கு நிகர் எவருண்டு?', என்று இறுமாந்து பேசுவர். தங்களது பண பலத்தைக் காட்ட வேண்டிய யாகங்கள் செய்வும் முற்படுவர். தவிர தாங்கள் பெரிய கொடையாளிகள் என்பதைக் காட்டிக் கொள்ள வேண்டும் என தான தர்மங்களுக்கும் ஏற்பாடு செய்வர். அப்படித் தானம் செய்கையில் கூடவே பத்திரிகைகாரர்கள், போட்டோக்காரர்கள் அனைவரையும் அங்கே வரவழைத்து அவர்களுக்குத் தடபுடலாக உபசாரம் செய்து, தனது தானச் செயலைப் போட்டோ எடுக்கச் செய்து பத்திரிகைகளில் ''கலியுகக் கர்ணனைக் காணீர்'' என்றெல்லாம் எழுதச் செய்து போட்டோவுடன் பிரசுரிக்க ஏற்பாடு செய்வர்.

இத்தகைய மோக வலையில் சிக்குண்டு காம போகங்களில் மூழ்கிக் கிடப்பவர்கள் இறுதியில் பாழ்நகரில் வீழ்கின்றனர் என்பது பகவானின் கருத்து. நரகம் என்பது இப்பொழுதைய நிலையைக் காட்டிலும் மிகக் கீழான நிலை என்று பொருள்படும்.

அசுரர்களும் யாகம் செய்வதுண்டு. அது பற்றிய விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

(தொடரும்)

 

# சக்தி

 

இவ்வுலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனுக்கும் ஆசை என்பதுண்டு. ஆசை அளவோடு இருந்தால், அது தேக்கிவைத்தநீரைப் போன்று தெளிவாகக் கட்டுக்குள் அடங்கிஇருக்கும். ஆனால், இதே ஆசை அளவுக்குமீறி போகும்போது அது அணையை உடைத்துகொண்டு வெளியேறிய வெள்ளத்தை போன்றது. இப்பேர்ப் பட்ட ஆசைகளை மனிதன் தர்மத் திற்குவிரோதமாகச் செயல்படுத்தும் போது அவன் பாவ மூட்டைகளை சுமந்த வண்ணம் இருக்கிறான். யாருக் கும்நரகத்திற்குசெல்ல வேண்டும் என் பது ஆசையில்லை. ஆனால், இவ்வுலக வாழ்க்கையில் உந்தப்பட்ட மனிதன் பின்தொடராத பொருள்களின் மேல் ஆவல் கொண்டு, என்றும் பின் தொடர்ந்து நல்ல மோட்சத்தை கொடுக்கக்கூடிய பொருளை உதறித் தள்ளிவிட்டுச் செல்கிறான்.

மனிதனுக்கு பாவம் செய்ய ஆசை யில்லாதபோது, அதை செய்ய வைக் கும் பொருள் யாது? என்ற வினா நம் மனத்துள் எழுகிறது. ஒரு பொருளை நாம் அடைய முற்படும் போது, அது நமக்குக் கிடைக்கவில்லை வென்றால் அப்பொருளின் மேலுள்ள மோகத் தால் குறுக்கு வழியில் சென்று அப் பொருளை அடைய முற்படுகிறோம். இந்தச் செயலை செய்ய மனிதன் முற் படும்போது பாவம் என்ற மூட் டையைத்தனக்குத் தெரியாமலே ஏற் றிக் கொள்கிறான்;கீதையில் பகவான் "கடமை மட்டும் செய்வதுதான் உனது வேலையே தவிர, அதன் பயனை எதிர் பார்ப்பது அன்று". - என்று உரைத்ததின் பொருள் ஆசையின்றி ஒரு காரியத்தை செய்தால் அது தான் புண்ணியம். ஆசைப்பட்டு ஒரு காரியத்தை செய்தால் அதுதான் பாவம்.

நம் மனத்தால், வாயால், பெற்ற செல்வத்தால் நாம் பாவம் செய்து கொண்டிருக்கிறோம். நாம் இந்த பாவங்களைச் செய்யக்கூடாது என்று நினைத்தாலும் அதைச் செய்ய முடி யாமல் இருக்க முடிவதில்லை. ஒரு வனிடம் குடிப்பழக்கம் இருந்து வரு கிறது என்று வைத்துக் கொள்வோம். அதை உடனே விட்டுவிட முடியாது. சிறிது, சிறிதாக குறைத்துப் பிறகு முழுவதும் நிறுத்திவிட வேண்டும். அதே போல எப்படி கையிற்றை சுற்றினாயோ அதன்படியே அவிழ்க்க வேண்டும். இப்படிச் செய்தால் பணத் தாலும், மனத்தாலும், தேகத்தாலும் செய்கின்ற பாவம் நீக்கப்பட்டு, ஆன்மா சுத்த நிலையை அடைந்து வரும்.

இப்பிறவிக்குப் பிறகும் நாம் இருக் கிறோம் என்று ஆஸ்திகன் நினைத்து

**கீழ்புவனகிரி சக்திதேசிகன்**

நல்லதையே ஒழுகுகிறான். நாஸ் திகனோ மறுபிறப்பு உள்ளது என்பது என்ன நிச்சயம் என்று நினைத்து கொண்டு தீமையைச் செய்கிறான்.ஒரு நாற்காலி ஒன்றை காண்கிறோம். ஆனால் அதைச் செய்த தச்சன் இறந்து விட்டான். தச்சன் இல்லாத கார ணத்தால் அந்த நாற்காலி செய்தது பொய் ஆகிவிடுமா? விடிந்த பிறகும் சூரியன் காணப்படவில்லை, மேகத் தின் சூழலால். இதற்காக சூரியனே இல்லை என்பது பொருளா...?

மனம் பகவானுடைய, பரம் பொருள் கண்ணனுடையது என்பதை அறிந்து, அதைக் குப்பை மேடாக ஆக்கி கொள்ளாமல், சுத்தம் செய்து பரம்பொருள் தங்குகின்ற இடமாக ஆக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு ஒரே வழி பகவானுடைய திருபாத கமலத்தை நினைத்துத்தினமும்குறைந் தது ஐந்து நிமிடமாவது தியானத் தில் இருப்பது உகந்தது.

ரப்பர் பந்தை சுவரில் எறிகிறோம், எறியப்பட்ட அப்பந்து திரும்பவும் உன்னிடம் வருகிறது. எறியப்பட்ட அப்பந்து காமம் என்கின்ற ஆசை சுவற்றில் மோதி உன்னிடம் வரும் போது அப்பந்து 'குரோதமாக' மாறு கிறது. இதுவே பாவம் என்பது. ஸ்ரீராமன் வனவாசம் செல்வதற்கு முன் கௌசல்யா தேவியிடம் விடை பெறச் செல்கின்ற போது, பதினான்கு ஆண்டுகளுக்கு வேண்டிய பலகாரம் செய்து கொடுக்கவில்லை; அதற்கு பதிலாக என்றும், எந்நாளும், எந் நேரமும் காத்து நிற்கின்ற தர்மத் தையே உபதேசித்தாள். மாங்கன்றை நட்டு, அதற்கு வேலி முதலியவை போட்டு, அன்றாடம் தண்ணீர்விட்டு மரமாக வளர்த்து, காய்கள் கனி நின்ற வரைக்கும் காத்து, அம் மாம் பழத்தை தின்ன எவ்வளவு காலம் ஆகுமோ—அந்தளவுக்கு பாடுபட்டு நம்முன்னோர்கள் வளர்த்து வைத்து, பழுத்து வைத்திருக்கின்ற ஞானப் பழத்தை சிரமமில்லாமல் பறித்து உண்கின்ற வரையில் வைத்துவிட்டு சென்றிருக்கிறார்கள். ஆனால் அதை பறித்துண்ணக்கூட முடியாமல் நாம் சோம்பேறிகளாக இருக்கிறோம் என் றால், நம்முடைய அறியாமையை என் னென்று சொல்வது. ஒருவன் இந்திய நாணயத்தைக் கொண்டு, அமெரிக் காவுக்கோ, ருஷ்யாவுக்கோ அல்லது மற்ற மேலை நாடுகளுக்கோ எவ்வாறு நாணய மாற்றமில்லாமல் செல்ல முடியாதோ அதுபோல இவ்வாசை களால் கட்டுண்ட இம்மனத்தைக் கொண்டு நாம் பரமாத்மாவான மோட்சத்தை அடைய முடியாது என்பது உண்மை.

மனம் ஒரு பூதம் போன்றது, பூதத்தை கட்டுபடுத்திஞல் என்னென்ன வேலேகளே செய்யுமோ, அது போல மனமான பூதத்தை கட்டுப் படுத்திஞல் மற்றவர்கள் செய்ய முடியாத காரியங்களே செய்து சாதித்து விடலாம். மழை காலத்து ஈரவிறகைப் போல நமது முன்னேர்கள் கண்டு கொடுத்த ஆசாரமும், தர்மமும் கொஞ்சம் இருந்து வருகிறது. இந்த ஈர விறகில் பற்றிருக்கின்ற தீ போன்ற தர்மத்தை, விசிறியாகிய தியானத்தைக் கொண்டு வீசிஞல், விறகு தீப்பற்றிச் சமையலுக்கு உதவுவதைப் போல, நாம் மோட்சத்தை அடையலாம். இந்த தர்மம் எந்த காலத்திற்கும் உபயோகப்படுகிற (after life) வகையில் நம்மை நாம் தயாராக்கிக் கொள்ள வேண்டும்.

ஆண்டவனல் படைக்கப்பட்ட பொருளேக் கொண்டு மற்ருென்று செய்யலாமேயொழிய, மனிதனல் ஒருசிறு மண்துகளேயும் படைக்க முடியாது என்பது உலகம் கண்ட உண்மை. நதியானது சமுத்திரத்தை அடைகிறது. பதிவிரதையின் மனமானது பர்த்தாவினிடத்தில் போய் கவர்ந்து கொள்கிறது. காந்தக் கல்லோடு ஊசி ஒட்டிக் கொள்கிறது. இதுபோல நம் மனமானது எந்த தீய பழக்கத்திற்கும் அடிபணியாமல், எந்நேரமும் சதா ஈஸ்வர நாமத்தை ஜெபித்துக் கொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் பிறவிப் பெருங்கடல் கடந்து சான்றேர்கள் அடைந்த இடத்தை அடையலாம்.

உலகத்திற்கெல்லாம் தாய் தந்தையாகிய ஈஸ்வரனே நாம் நமஸ்காரம் பண்ணுகிறேன் என்று மகாகவியாகிய காளிதாசன் ரகுவம்சத்தில் முதல் மங்களச் சுலோகத்தில் "பாவம் நீங்க ஒரே வழி பகவத் தியானமாகும். மனம் சுத்தப்படுவதற்கும், பழைய பாவ கர்மங்களே நீக்குவதற்கும், பதிய பாவங்களே செய்யாமல் இருப்பதற்கும் எல்லோரும் முடிந்த வரையில் பரமாத்மாவை நினேத்து தியானம் செய்ய வேண்டும். அப்போதுதான் மனத்தால் நாம் மார்கத்தை அடையலாம்" என்று கூறுகிருர்.

ஆத்ம சக்தியால் செய்ய முடியாதது ஒன்றுமில்லே. "நீ எதனே நினேத்து உன் முழு மனதையும் அதனில் ஒரு முகப்படுத்திக் கொள்கிருயோ நீ அதுவே ஆவாய். எனவே, என்னல் இதுயியலாது, நான் இதனேச் செய்ய சக்தியற்றவன் என்று ஒரு போதும் நினேக்காதே! உன்னுள் உன் மனத்துள் மகாசக்தி கொலு வீற்றிருக்கிறது என்பதை மறவாதே!" என்பது உபநிஷத்தின் உரையாகும்.

மரணம் என்ற சொல்லேக் கேட்டவுடனே மனிதர்களில் பலரும் திடுக்கின்றர்கள். அதற்குக்காரணம், இந்த உலகத்தில் தாம் மிகவும் வருந்தித் தேடிய பொன்னேயும், பொருளேயும் விட்டு பிரிய மனமில்லாமை. தன் அன்பிற் சிறந்த மனேயாளே பிரிய மனமின்மை. தன் தாய், தந்தையையோ, உறவினர். நண்பர் முதலி

## தெரிந்து கொள்ளுங்கள்

### திருமாலின் தேவிமார்கள்

திருமகள்: பெரிய பிராட்டி. ஞானப்பால் ஊட்டி வளர்க்கும் தாய். யாருக்கும் தண்டனே தர அறவே அறியாத தாய்.

பூமாதேவி: குற்றம் கண்ட இடத்து ஸ்ரீமந் நாராயணனிடம் பொறுத்தருளச் செய்பவள்.

நீளாதேவி: தனது மயக்குகளால் நம் குற்றங்கள் எம்பெருமான் கண்ணில் படாமலேயே செய்வாள்.

### அரசமரம் வலம் வரும்போது சொல்ல வேண்டியது

மூலதோ ப்ரம்ம ரூபாய
மத்யதோ விஷ்ணு ரூபினே அக்ரத:
சிவரூபாய அஸ்வத்தாய
நமோ நமஹ

பிரம்மா, விஷ்ணு, ருத்ர ரூபியான அரச மரத்தை மேலே கண்ட மந்திரத்தை ஓதி வலம் வருவது மிகவும் நல்லது.

### திருமால் அவதாரம் 24

திருமால், நாம் நன்கு அறிந்த பத்து அவதாரங்களேயும் தவிர, கீழ்க்கண்ட அவதாரங்களேயும் எடுத்துள்ளார். இதனே ஸ்ரீ பாகவதம் முதல் ஸ்கந்தம் மூன்றும் அத்தியாயம் விரிவாகக் கூறுகிறது.

1. நாராயணன், 2. மோகினி, 3. தத்தாத்திரேயர், 4. தன்வந்திரி, 5 ஜனகர் முதலிய நால்வர், 6. நாரதர், 7. ரிஷ்யர், 8. கபிலர், 9. வியாஸர், 10. யஜ்ஞர், 11. ப்ருதுமன்னர், 12. புத்தர், 13. ஹம்ஸாவதாரம், 14. ஹயக்ரீவர்.

இந்த பதினன்குடன் எல்லோரும் அறிந்த பத்தும் சேர்ந்து இருபத்தி நான்கு.

### நள்ளிரவில் நீராடல்

சிவராத்திரி, மாதப் பிறப்பு, பிறப்பு, இறப்பு, கிரஹணம் இவை நேர்ந்தாலன்றி நள்ளிரவில் நீராடல் கூடாது.

தகவல்—கமலா மாரியப்பன்.

யோரையோ விட்டு பிரியமன மின்மை.

ஆனால், வேறு சிலரோ மரண பயம் சிறிதேனும் இல்லாமல் வெட்டுக்கும் குத்துக்கும் முன்னின்று தன்னுயிரை மாய்த்துக் கொள்ள நினைக்கிறார்கள். வேறு சிலர் கடவுளுமில்லை, ஆத்மாவுமில்லை, முற்பிறப்புமில்லை, பிற்பிறப்புமில்லை, புண்ணியமுமில்லை, பாவமுமில்லை. எந்த வழியிலாவது திரவியத்தை சம்பாதித்து சுகமாய் வாழ்வதே சுவர்க்கம். அஃது இல்லாமல் வருத்தப்படுவதே நரகம். நான்கு பூதங்களான இந்த உடம்பு அழிந்தால் அதனோடு உயிரும் அழிந்து போகும் என்று நாஸ்திகம் பேசும். மக்கள் எப்பிறப்பைப் பற்றியும் கவலைப்படாமல் விலங்குகளைப்போல, பறவைகளைப் போல வாழ்ந்து வருகின்றனர்.

மரணத்திற்குப் பின் ஆத்மாவுக்கு உண்டாகும் சக்தியையும், இன்பத்தையும் அறிவார்களானால் மரணம் அடைந்த பிறகும் தம் ஆத்மாவானது தமது உற்றார்களோடு உறவாடி மகிழ்ந்து, அவர்களுக்குப் பல வகையான நன்மைகளைச் செய்யக் கூடும் என்றும் அறிந்து மரணத்திற்குச் சிறிதும் அஞ்சாமல் வாழ்வர்.

புல வழிகளில் புகுந்து கொலைத் தொழிலிற் பழகி மரணத்திற்குத் துணிந்து தம்முயிரைத் துரும்பு போல் நினைத்திருப்பவர்கள், மரணம் அடைந்த பின் தம் கெட்ட செய்கையால் தாம் அடையும் பெருந்துன்பத்தை அறிவார்களேயானால் இந்தப் பிறப்பில் தம்மைத் திருத்திக் கொண்டு எவ்வளவோ நல்ல காரியங்களைச் செய்து சிறப்படைவார்கள். நேற்றைய தினம் துவங்கிய ஒரு தொழிலானது இன்றும், நாளையும் தொடர்ச்சியாக வருவது போல், முற்பிறவிகளில் துவங்கிய நமது கர்மமும் இப்பிறவியிலும் இனிவரும் பிறவிகளிலும் தொடர்ச்சியாக வந்து கொண்டிருக்கும்

ஆத்மாவானது என்றும் அழிவில்லாத பொருள்; அது மேலே போர்த்துக் கொண்டு வரும் இந்த உடம்புக்குத்தான் அழிவேயல்லாமல் அறிவு ரூபமாயிருக்கும் அந்த உயிருக்கு எக்காலத்திலும் அழிவேயில்லை. இன்று இந்த உடம்பில் இருக்கும் உயிரானது இதை விட்டு மற்றொரு பிறவியில் மற்றோர் உடம்பிற்கும் போகின்றது. ஒரு வீட்டில் குடியிருப்பவன் மற்றொரு நாளில் வேறொரு வீட்டிற்கு குடிபெயரும் போது முதற்வீட்டில் சேர்த்து வைத்திருக்கின்ற பொருளை, மறுவீட்டிற்கு எடுத்து செல்வதைப் போல உயிர் இந்த உடம்பில் இருக்கும்போது செய்து சேர்த்த வினைகளை மாத்திரம் எடுத்துக் கொண்டு அதனைவிட்டு வேறொரு உடம்பிற் செல்லும்போது தாம் செய்த வினைக்கு ஏற்ப வாழ்வு முறை அமைகிறது.

இதனைப் பட்டினத்தார் அவர்கள்,

" அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே
விழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி
விம்மியிரு
கைத்தலை மேல்வைத்து அழுமைந்
தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரும் இருவினைப் புண்
ணிய பாவமுமே.

என்று அருளியுள்ளார்கள்.

இது எனக்கு ருசியை இப்போது தருகிறதென்று பிசகாக நினைத்துப் பனம் பழத்தை வேண்டிய மட்டும் புசித்தவன் இன்னும் சில நாட்கள் கழித்துப் பித்த நோயாற் பிணிக்கப் பட்டு வருந்துவதுபோல, இப்போது இது எனக்கு நல்லதெனக்கருதி தீய வழியில் ஒழுகுகின்றவன் மறுமையில் அதனால் வருந்தி துன்பத்திற்கு உள்ளாவது நிச்சயம். ஆகையால் இந் நிலவுலகத்தைக் காட்டிலும் சிறந்த உலகம் வேறு உள்ளது என்று அறிந்து அவ்வுலகத்தில் சஞ்சரிப்பதற்கு இந்த உடம்பைக் காட்டிலும் இன்னும் வேறு உடம்புகள் உள்ளன

என்பதை நாம் மகாசக்தியின் துணைகொண்டு அறிந்து அதன்படி ஒழுகுதல் ஒவ்வொருவரின் தலையாய கடமையாகும்.

இந்த நிலவுலகத்தில் இயங்கும் இந்த உடம்பு மிகவும் ஸ்தூலமாய்க் கனத்த பொருள்களின் சேர்க்கையால் உண்டானது. ஆகையால்தான் இதனைத் தூல உடம்பு என்று ஞான நூல் பகர்கிறது. வெங்காயச் சருகுகளைப் போல் நம் உடம்பும் ஒன்றன் மேல் ஒன்றாக வியாபித்து நிற்கிறது. இக்கால உடம்பினுள் இருக்கும் மற்ற நான்கு உடம்புகளும் ஒன்றையொன்று ஊடுருவிக் கொண்டு நிற்கிறது. இவற்றை 1. சூக்கும சரீரம் 2. குணசரீரம் 3. கஞ்சுகசரீரம் 4. காரணசரீரம் என்பதை 1. பிராணமயகோசம் 2. மனோமய கோசம் 3. விஞ்ஞானமயகோசம் 4. ஆனந்தமய கோசம் என்றும் கூறுவர்.

நமது கண்ணுக்கு எதிரே தோன்றும் இந்தத் தூல உடம்பானது அழிந்து போனால் அதற்குள் வியாபித்திருக்கும் மற்ற நான்கு உடம்புகளும் அதுபோல் அழிந்து போவதில்லை. அவை நான்கும் உயிரோடு மிக்க ஒற்றுமை உடையனவாய் பிறவிகள் தோறும் தூல உடம்புகளிற் சென்று பிரவேசிக்கும். இவ்வாறு, நம்முடைய ஐந்து கூறுகளில் ஒன்று அழிந்து போவதை உற்று நோக்குங்கால் நாம் இந்த இறப்பைக் கண்டு ஏன் துக்கப்பட வேண்டும்? இந்தத் தூல தேகம் போனால் மற்றுமொரு தூலதேகம் அவசியம் வரத்தான் போகிறது. இதனைக் காட்டிலும் நுட்பமான நம்முடைய மற்ற உடம்புகள் இதுபோல் விரைவில் அழிந்து போகாமையாலும் அவ்வுடம்புகளைப் பாதுகாப்பதற்கு நற்சிந்தனையும், நற்செய்கையும் அவசியமாகும்.

ஓர் ஆன்மா பரிசுத்தமான சிந்தனையுடையதாக இருக்குமாயின் அப்பரிசுத்தத்திற்குப் பொருந்த

அதன் சூக்கும உடம்பும் (அடையும்) தும்பை மலர் போன்று வெண்ணிற முடையதாயிருக்கும். அங்ஙனமின்றி அவ்வான்மா தீய சிந்தனையும், தீய செய்கையும் உடைய தாயிருப்பின் அவற்றிற்கு இசை யவே அதன் சூக்கும உடம்பும் உடையும் கரிய நிறம் உடையதாக இருக்கும்.

வெறும் உயிர் வாழ்தல் மட்டுமே வாழ்க்கை அல்ல. உயிர் வாழ்தல் மட்டுமே வாழ்க்கை என்று கொண்டால் மனிதனுக்கும், மற்ற உயிரினங்களுக்கும் என்ன வேறுபாடு இருக்க முடியும்? இறைவனுடைய படைப்புகளில் உயிர்கள் அனைத்துமே சமம் என்று ஆன்மீக கருத்து ஒரு புறம் பகர்ந்தாலும், பிற உயிரினங்களை விட மனிதன் சிறப்பான ஈடு சொல்ல முடியாத பல தகுதிகளைப் பெற்றிருக்கிறான் என்பதை யாராலும் மறக்க முடியாது. மனிதனைத் தவிர்த்து பிற உயிரினங்கள் தங்களுக்கென இறைவன் வகுத்தளித்த நெறிமுறைகளை அனுசரித்து சற்றும் மாறுபாடு இல்லாமல் சீரான ஒரு வாழ்க்கையை நடத்துகின்றன. சான்றாக, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஒரு காகம் எப்படி வாழ்ந்து வந்ததோ, அந்த வாழ்க்கையே இப்போதும் வாழ்ந்து வருகிறது. ஆனால், மனிதனோ கற்காலத்தில் தொடங்கிய வாழ்க்கை முறைக்கும் இந்த கலியுக கால வரைக்கும் குறிப்பிட்டுச் சொல்லத் தக்க வேறுபாட்டை கொண்டு வாழ்ந்து வருகிறான். எனவே, தனக்கென ஒரு வாழ்க்கை அமைப்பை மனிதன் தானாகத் திட்டமிட்டுத் தன் விருப்பம் போல வாழ்கிறான்.

மனித வாழ்க்கை பூரணத்துவம் பெற்ற இன்ப மயமான வாழ்க்கை என்றால் எல்லா மக்களும் எல்லா இன்பங்களைப் பெற்றல்லவா வாழ வேண்டும்? எல்லோருக்கும் ஒரே வித மான சக்தி (செயல்) இருக்க வேண்டும்? என்ற வினா நம்மனக்கண்முன் எழுகிறது. இதற்கு மகாகவி பாரதி "உடலால் மனிதனாகவும், இயல்பால் செயற்பாட்டால் விலங்கினமாகவும் வாழ்வதால்தான் இப்பேற்பட்ட வாழ்வை மனிதன் எல்லோரும் பெற முடியாமல் போயிற்று. நம்மை நாமே கவனிக்குமிடத்து எத்தனை விதமான மிருகங்களாக இருக்கிறோம் என்பது நமக்கே விளங்கும். மனிதர்களில் பலர் நரிகளைப் போலவும், பாம்பைப் போலவும், பன்றியாகவும், நாயாகவும், வேட்டை நாயாகவும், வௌவாலாகவும், கிளிப் பிள்ளையாகவும், கழுதையாகவும், வான்கோழியாகவும், கழுகு போலவும், ஆந்தைகளை போலவும் வாழ்கிறான். எவனொருவன் ஒவ்வொரு நிமிஷமும் சத்தியத்தையே பேசி தர்மத்தை ஆதரித்து பரமாத்மாவை அறிய முயலுகிறானோ அவனே மனிதனென்றும், தேவனென்றும்'' கூறுகிறார்.

சான்றோர்கள் கண்ட இவ்வளவு உண்மைகளிலிருந்து நாம் அறிவது தர்மம், சத்தியம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய உட்பொருளைக் கொண்ட மகா சக்தியை அறிவதேயாம். அதுவே நாம் பெற்ற இப்பிறவியை நல்ல முறையில் அடைந்த பலனாகும்.

(நூல் உதவி: 'மறைமலையடிகளார் எழுதிய 'இறப்புக்குப்பின் மனிதரின் நிலை'.)

ஒரு பொருள் இலவசமாகக் கிடைக்கிறதென்றால் அதைப் பெற நாடி ஓடுவது மனித இயல்பு.

இலவசமாகக் கொடுக்கும் பொருள்களைப் பற்றிப் பத்திரிகைகளில் பல்வகை விளம்பரங்கள். 'எங்களிடம் பத்து கிராம் தங்க நகை வாங்கினால் வெள்ளிக்கிண்ணம் ஒன்று இலவசம்' என்கிறது ஒரு நகைக் கடை விளம்பரம்! துணிக்கடை ஒன்று புதிதாகத் திறக்கப்படுகிறது. 'திறப்புவிழா நாளில் நூறு ரூபாய்க்குத் துணி வாங்கினால், பத்து ரூபாய் மதிப்புள்ள துணி இனாம்' என்று அங்கே விளம்பரம் வைத்திருக்கிறார்கள்!




இன்னும் பல விநோதமான விளம்பரங்கள் — இலவசம்! இலவசம்! என்று. இந்த விளம்பரங்களைப் பார்த்து, இலவசமாகக் கிடைக்கும் பொருள்களைப் பெற மனம் ஆசைப்படுகிறது; அந்தக் கடைகளில் மக்கள் கூட்டம் நிரம்பி வழிகிறது.

புறத்தேவைகளுக்குப் பயன்படும் மிகச் சாதாரணமான பொருள்களை இலவசமாகப் பெறுவதற்கே இப்படி அலைவதென்றால், அகத்தேவையாகிய ஆன்மாவை ஈடேற்றுகின்ற தெய்வ அருள் இலவசமாகக் கிடைக்கும் போது அதைப் பெற நாம் முயற்சி செய்ய வேண்டுமல்லவா? தட்டுங்கள் திறக்கப்படும்; கேளுங்கள் கொடுக்கப்படும் என்னும் தெய்வப்பணபு நமக்கு அருள் செய்யக் காத்திருக்கும்போது அவ்வருளைப் பெற நாம் முன் நிற்க வேண்டாமா?

இறையருளை வேண்டாதார் எவருமில்லை. கடவுளின் கருணையால் உடல் நலத்தோடு நீண்டகாலம் வாழ வேண்டும் என்பது சிலரது ஆசை; நிறைந்த செல்வம் பெற்று இன்ப வாழ்வு வாழ்வதற்குக் கடவுளின் அருளை வேண்டுவோர் சிலர்; உயர் கல்வியும் நல்லறிவும் பெற்றுப் புகழுடன் வாழத் தெய்வத் திருவருளை எதிர்நோக்குவோர் சிலர். இவ்வாறு தாமும் தம் குடும்பமும் உறவினரும் நிறைவாழ்வு வாழ இறையருளுக்காக ஏங்குகின்றனர் மக்கள்.

கடவுளின் அருளைப் பெறுவதற்கு வழி என்ன? 'வழிபாடு செய்வது தான் தெய்வ அருள் பெறும் வழி' என்பதைப் பலர் நமக்கு உணர்த்தியுள்ளனர். வழிபாடு நம்முடைய வேண்டுதலை இறைவனிடம் கொண்டு போய்ச் சேர்க்கிறது. கில்பர்ட் ஜான்சன் என்னும் ஆங்கிலக் கவிஞர் 'கண்ணுக்குப் புலப்படாத பாலம்' தமது கவிதையில் 'வழிபாடு என்பது மனித மனத்திற்கும் கடவுளின் சிம்மாசனத்திற்கும் போடப்பட்ட பாலம்' என்று குறிப்பிடுகிறார்.

There is a bridge where of the span
Is rooted in the heart of man,
And reaches, without pile or rod,
Unto the great white Throne of God

என்பது அவரது கவிதை.

உலகத்தை ஆட்டிப் படைக்கும் இறைவன், வழிபாட்டிற்கு உருகி அருள் புரிகிறான். ஜேம்ஸ் மோண்ட்கோமரி என்னும் மேலைநாட்டுக் கவிஞர் 'வழிபாடு' (Prayer) என்னும் தமது கவிதையால் 'உலகையே அசைக்கின்ற கையை அசைத்துப் பேரின்பத்தைக் கொண்டு வருவது வழிபாடே' என்னும் கருத்தை

Prayer moves the arm
Which moves the world
And brings salvation down

என்னும் வரிகளில் தெளிவு படுத்துகிறார்.

அர்ச்சுனனுக்கு அறம் உரைத்த பார்த்தசாரதி பகவத் கீதை - ஒன்பதாம் அத்தியாயம்–ஒன்பதாம் சுலோகத்தில் 'பக்தியுடன் என்னை வழிபடுபவர்கள் என்னிடம் இருப்பார்கள். நானும் அவர்களிடம் இருப்பேன்' என்று சொல்லுவதால், வழிபாட்டினால் இறைவனையே நம்மிடம் அழைக்க முடியும் என உணரலாம்.

அன்புடன் அழைப்பவர்களிடம் வருவது குழந்தை. தன் குழந்தைகள் அனைவரையும் சமமாக மதித்து வளர்ப்பவள் தாய்; இவை நாம் காணும் உண்மைகள். ஆனால் இறைவனோ தன்னை வழிபடும் நல்ல அன்பர்களுக்குக் குழந்தையை விட - தாயை விட மிக நல்லவனாக இருப்பவன் என்கிறார் திருமூலர்.

சேயினும் நல்லன், அணியன்,
நல்லன்பர்க்குத்
தாயினும் நல்லன் பின்தாழ்
சடையோனே

என்பது அவரது திருமந்திரம்.

புலவர் பெ. கிருஷ்ணராஜன், எம்.ஏ.
சேலம்—6.

எனவே வழிபாடு மூலம் தெய்வ அருளைப் பெற முடியும். அந்த வழிபாடு உண்மையான அன்பு கலந்ததாக இருக்க வேண்டும். சூரபன்மனைப்போல உடல்தசையை அறுத்து வேள்விக் குண்டத்திலிட்டு வேள்வி செய்தாலும், அன்பு இல்லாத வழிபாடு பயன்படாது. 'தனது உடல்

எலும்புகளை விறகுகளாக ஆக்கி, நெருப்பு மூட்டி, அந்த நெருப்பில் தன் உடல் தசைகளைப் பொன்போல வறுத்தாலும், அன்போடு உருகி அகம் குழைவோரே இறைவனை அடைய முடியும்' என்று திருமூலர் குறிப்பிடுகிறார்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலனும் தம்வசமிழந்து ஆண்டவனையே நினைந்து ஆராதிப்பது தான் உண்மையான வழிபாடாகும். 'புலன் ஐந்தும் புறத்தே செல்லாது ஆர்வம் புரியப் பரிசினால் புல்கில் மாவலிபால் வண்கை நீர் ஏற்றானைக் காண்பதுவும் எளிதாகும்' என்று பொய்கை ஆழ்வார் கூறுகிறார். காளத்திமலைவேடனாகிய கண்ணப்பன் அரிய புலன் ஐந்தும் இறைவனுக்கே ஆக்கியதாலன்றோ, அவ்விறைவனுக்கு வலப் பக்கத்தில் இருக்கும் பேறு பெற்றான்?

அடியார் தொண்டே ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டு எனக்கொண்டவர் நாவுக்கரசர். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பதைக் கொள்கையாக வைத்து வாழ்ந்து காட்டியவர் அவர். இறைவனை எப்படித் தொழவேண்டும் என்று அவர் கூறுகிறார். 'நமது கைகள் இரண்டையும் ஒன்றாக உயர்த்திக் கூப்பி வணங்க வேண்டும்; அந்தக் கைகளால் மலரிட்டு அர்ச்சித்து வணங்க வேண்டும்' என்பது அவருடைய திருவுள்ளக் கருத்து. எனவே அவர் தமது கைகளை நோக்கி,

கைகாள் கூப்பித் தொழீர்
கடிமாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த
பரமனைக்
கைகாள் கூப்பித் தொழீர்

என்று வேண்டுகோள் விடுக்கிறார்.

திருக்கைகளால் வணங்குதல் வேண்டும் என்பதைத் தாயுமானவரும், வடலூர் இராமலிங்கரும் வற்புறுத்த விரும்புகின்றார்கள். 'எனக்குக் கண் போல முக்கியமானவர்களாக இருந்தாலும், இறைவனைக் கைகளால் வணங்காதவர்கள் மண்ணே; அவர்களின் நட்பை நான் விரும்பவில்லை' என்பதைத் தாயுமானவர்,

கண்ணுவா ரேனும்உனைக்
கைக்குவியா ராயின்அந்த
மண்ணுவார் நட்பை
மதியேன் பராபரமே

என்னும் பராபரக் கண்ணி மூலம் வெளிப்படுத்துகிறார். வடலூர்ப் பெருமானோ 'இறைவன் திருமுன் குவியாத வஞ்சகர்களின் கைகள் பிச்சை ஏற்பதற்கு நீளுகின்ற கொடிய கைகளாகும்' என்று சாடுகிறார்.

பரமநின் திருமுன்னர்க்
குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள் கொடுங்கை

என்பது அவரது அருட்பா. கரவணக்கம் இன்றியமையாதது என்பதை நன்கு உணர்ந்தவர் குலசேகர ஆழ்வார். அதனால்தான் 'என்றன் கைகள் கொய்ம்மலர்தூய் என்று கொலோ கூப்பும் நாளே!' என அரங்கத்தம்மானை நினைந்து ஏங்குகிறார் அவர்.

கடவுளின் பெருமைகளை வாயாரச் சொல்வது வழிபாட்டின் முக்கிய அம்சமாகும். 'இறைவனுடைய சீர் பேசும் வாய் தேவருலகத்தெள்ளமுது உண்ட திருவாய் ஆகும்' எனப் பாராட்டுகின்ற வடலூர் வள்ளல, 'இறைவனை வாழ்த்தாத வாய் பேயி



கஜ சிம்ஹமூர்த்தி - தாராசுரம் கோயில், கோவை.
திரு. கோவை சீதாராமன்

னது வாய்' என்றும் 'அது பழைய சோற்றுக்கு ஏங்கியிருக்கும் வாய்' என்றும் இகழ்ந்து பேசுகிறார். நாவால் துதித்து வழிபடுதலை விரும்பும் குலசேகரர்,

மாயோனை மணத்தூணே
பற்றிநின்றுஎன்
வாயார என்றுகொலோ
வாழ்த்தும் நாளே

என்று தம் ஆவலை வெளிப்படுத்துகின்றார்.

இறைவனை வழிபடும் போது நம்முடைய தலையை அவரது திருவடிகளில் குனிந்து சேர்த்தி வணங்க வேண்டும். வழிபாட்டிலேயே மிக உயர்ந்த நிலை இது. இறைவனுடைய பாதங்களை வணங்காத தலை, பயனற்ற தலை என்கிறார் வள்ளுவர்.

கோளில் பொறியின் குணமிலவே
எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

என்பது திருக்குறள். தலையால் வணங்காத மனிதர்களிடம் அடங்காத சினம் கொள்ளுகிறார் வடலூரார். 'இறைவனை வணங்காத மூடர் தலை, விறகு சுமக்கும் தலை' என்று குனிந்து வணங்காத தலைக்கு ஒரு குட்டு வைக்கிறார் அவர்.

கைகுவித்து வணங்குதலும், வாய் நிறையத் துதித்தலும், தலைதாழ்த்திப பணிதலும் ஆகிய இவற்றோடு இறைவன் பெருமைகளைச் செவிகுளிரக் கேட்பதுவும் அவருடைய திருக்கோயிலைத் தூய்மைப் படுத்தலும் வழிபாட்டிற்குரிய நிலைகளாம். 'என் செவியிரண்டும் கேளவனது இன்மொழியே கேட்டிருக்கும்' என்பார் பொய்கையாழ்வார். பூநாளும் தலை சுமப்பப் புகழ்நாமம் செவிகேட்ப, நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே—என்பார் திருஞான சம்பந்தர். மணிவாசகப் பெருந்தகை இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயிலைத் தூய்மைப் படுத்தவில்லையாம்; மெழுகவில்லையாம். அதனால் சாவை நோக்கி விரைந்து செல்கின்றாராம்.

கோமான்நின் திருக்கோயில் தூகேன்
மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்

என்று வருத்தப்படுகிறார் அவர்.

உள்ளத்தின் உணர்ச்சிகளை வெளிப்படுத்தக் கண்ணைப் போலச் சிறந்த உறுப்பு வேறு எதுவும்இல்லை. கோபமாக இருந்தாலும் மகிழ்ச்சியாக இருந்தாலும் கவலையாக இருந்தாலும் கண்கள் காட்டிவிடும். நெடுநாள் பிரிந்திருந்த தாயும் குழந்தையும் ஒருவரை ஒருவர் சந்திக்கும் போது அவர்களது கண்களிலிருந்து பொங்கி வெளிப்படும் ஆனந்தக் கண்ணீரே அவ்விருக்கும்உள்ள பாசப் பிணைப்பைக் காட்டி விடும் 'புன்கணீர் பூசல் தரும்' என்று குறள் இதனைக் கூறும்.

உண்மையான அடியவர்களின் கண்களும் இப்படித்தான். இறைவனின் பெருமைகளை நினைத்தாலும்—இறைவனின் திருக்கோயிலை அடைந்தாலும்—இறைவன் திருவுருவினைக் கண்டாலும் மெய்யன்பர்களின் கண்களினின்று பக்திக் கண்ணீர் பெருக்கெடுக்கும். 'நிறம் திகழும் மாயோனைக் கண்டு என் கண்கள் நீர்மல்க என்று கொலோ நிற்கும் நாளே!' என்னும் குலசேகர ஆழ்வாரின் ஏக்கத்திலிருந்து இதனை நாம் அறியலாம். உயர்ந்த வழிபாட்டிற்கு இதுவும் ஓர் அடையாளம்.

மெய், வாய் முதலிய நம் உடலுறுப்புக்களால் மட்டுமல்லாமல் புறப்பொருள்களால் வழிபாடு செய்தலும் இறைவனுக்கு மகிழ்ச்சி தருவதாகும். இறைவனை வழிபடுவதற்குப் பூவும் நீரும் பச்சிலையும் சிறந்த பொருள்களாகக் கொள்ளப்படுகின்றன. மஞ்சன நீராட்டலும், மணம்





ஸ்ரீ பார்வதீஸ்வர கோயில் - திருச்சாத்சேரி, (காரைக்கால்)
அம்பாள் சுயம் வரதபஸ்வினி, சம்பந்தர் 7 பதிகங்கள் பாடியுள்ளார்; ஈஸ்வரன் நெய் தெளித்துப் பஞ்சத்தைப் போக்கியதால், இத்தலம் திருச்சாத்சேரி என்று பெயர் பெற்றது.
திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி - கோவை.

மிக்க மலர்களைச் சூட்டலும், துளசி வில்வம் போன்ற இலைகளால் அர்ச்சித்தலும் இன்றைக்கும் திருக்கோயில்களில் காணலாம்.

புண்ணியம் செய்வாருக்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்

என்கிறார் திருமூலர். இறைவனை வழிபடுவதற்கு மலர், நீர், பச்சிலை கிடைக்காத போது நெஞ்சத்தை அர்ப்பணிக்க வேண்டும் என்கிறார் திருவெண்காடர்.

போதும் பெறுவிடில் பச்சிலையுண்டு
புனலுண்டெங்கும்
ஏதும் பெறுவிடில் நெஞ்சுண்டு

என்பது அவரது பாடல். கண்ணன் தனது கீதையில் 'எவனொருவன் ஓர் இலையையோ, ஒரு கனியையோ, நீரையோ இவைகளில் ஏதாவது ஒன்றை எனக்குப் பக்தியுடன் தருகிறானோ, அத்தகைய தூய மனமுள்ளவன் பக்தியோடு கொடுத்தவைகளை நான் திருப்தியுடன் உண்ணுகிறேன்' என்று அருளிச் செய்ததை,

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।
तदहंभक्त्युपहृतमश्नामि प्रयतात्मन : ||

பகவத் கீதை 9-ஆம் அத்யாயம் 26ஆம் சுலோகத்தில் காணலாம்.

அறம் செய்தவர்க்கே நன்மை உண்டாகும் என்பது ஆன்றோர் வாக்கு. காசு — உணவு — துணி போன்ற பொருள்களைத் தானமாக வழங்குவதுதான் அறமென்றால் அது செல்வந்தர்களால் மட்டுமே முடியும். ஒரு பொருளுமில்லாத ஏழை எங்ஙனம் அறம் செய்ய முடியும்? இதனைச் சிந்தித்துப் பார்த்த திருவள்ளுவர், மனத்தில் குற்றமில்லாமல் இருப்பதே அறம் என்பதை மனத்துக் கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன் என்று எடுத்துக் கூறுகிறார். அவ்வாறே தவம் செய்தவர்க்கே தெய்வ அருள் கிட்டுமென்றால், ஆசைகளையெல்லாம் அறுத்தெறிந்த துறவிகளால் மட்டுமே அதனைப் பெற முடியும். உலகியலில் எல்லா உயிர்களோடும் ஒட்டி உறவாடி அன்பினை வளர்க்கும் இல்லறத்தார் எங்ஙனம் தெய்வ அருளை பெறுவது? வழிபாடுதான் இதற்குச் சிறந்த வழியாக அமைகிறது.

'உடல் குழைய, எலும்புகளெல்லாம் உருக, கண்களில் பக்திக் கண்ணீர் பெருக, காந்தத்தினை அணுகிச் சேரும் ஊசிபோல இறைவனுடைய உறவையே நினைத்து, நெஞ்சம் பதைக்க, பாடி ஆடிக் குதித்து, குளிர்ந்த முழுநிலவு போன்ற முகத்திலே புன்னகை தவழ, மலர் போன்ற கைகளைக் கூப்பி வணங்கி வாழ்த்துகின்ற, கடல் வெள்ளம் பொங்கிப் புறப்பட்டது போன்ற பேரன்பு கொண்ட பக்தர்களின் அன்புக்கு மிகச் சுலபமாக இறைவன் அருள் புரிவான்' என்பதை

உடல்குழைய என்பெலாம் நெக்குருக
விழிநீர்கள் ஊற்றென
வெதும்பியூற்ற
ஊசிகாந்தத் தினைக்கண் டணுகல்
போலவே ......
கடல் மடை திறந்தனைய அன்பர்
அன்புக்கு எளியை

என்னும் பாடலில் தாயுமானவர் விளக்கமாக எடுத்துக் கூறுகின்றார். எனவே ஐம்புலனும் ஒன்றிச்செய்யும் வழிபாட்டினால் தெய்வத் திருவருளை பெறமுடியும் என்பது புலனாகிறது.

நினைப்பவர் நெஞ்சில் இருப்பான் இறைவன் என்கிறார்கள் நம் சமயச் சான்றோர்கள். 'அடியார்தம் மனத்திலுள்ளார்', 'சிந்திப்பார் சிந்தையுள்ளார்' என வழிபடுகின்றவர்களின் உள்ளங்களையே திருக்கோயிலாகக் கொண்டு எழுந்தருளுபவன் இறைவன். பல்லவ மன்னன் கட்டிய கற்கோயிலில் எழுந்தருளாது, பூசலார் நாயனார் அமைத்த உள்ளக் கோயிலில் சிவபெருமான் எழுந்தருளியது இவ்வுண்மையை உணர்த்தும்.

அன்பர்களின் மனமே ஆண்டவனுக்கு உகந்த கோயில் என்பதை நாவுக்கரசரின் தேவாரம் நன்கு உணர்த்தும். உமையொரு பாகனாக இறைவன் கயிலாயத்தில் வீற்றிருக்கும் அழகுக் காட்சியைத் திருவையாற்றில் கண்டு மகிழ்ந்த இவர்,

முகமெலாம் கண்ணீர் மல்க
முன்பணிந்து ஏத்தும் தொண்டர்
அகமலால் கோயில் இல்லை
ஐயன் ஐயாற னார்க்கே

என்று கூறுகிறார். இக்கருத்தைத் தாயுமானவரும் ஏற்று, மனக்கோயிலில் வீற்றிருக்கும் இறைவனை வழிபடும் முறையையும் எடுத்துச் சொல்லுகின்றார். 'நெஞ்சகமே கோயில்; நினைவே சுகந்தம்; அன்பே மஞ்சன நீர்' என்னும் பாடலில், எப்பொழுதும் ஆண்டவனையே நினைப்பதாகிய நறுமணத்தைப் பரப்பி, பக்தியாகிய மஞ்சன நீராட்டினால் நெஞ்சக்கோயிலில் அமர்ந்து இறைவன் அருள் புரிவான் என்று அவர் கூறுகிறார்.

எனவே நினைப்பு — பேச்சு — செயல் (மனம், வாக்கு, காயம்) என்னும் இம்மூன்றும் இறைவனையே துதிக்க, ஐம்புலனும் அவரையே சார்ந்து நிற்கத் தெய்வத் திருவருள் கிட்டும் என்பதில் ஐயமில்லை.

வாழ்த்த வாயும், நினைக்க
மடநெஞ்சும்,
தாழ்த்தச் சென்னியும் தந்ததலைவனை

மனம் — மொழி — மெய்யினால் வழிபட்டு, அருள்பெற வாரீர்! வாரீர்!



# தொட்டில் திருநாளும் திருவாபரணங்களும்

நமது இல்லங்களில் பிறக்கும் குழந்தையைத் தொட்டிலில் இடுவோம். உறவினர்களையும் நண்பர்களையும் அழைப்போம். பலரும் வருவார்கள். தங்கள் சக்திக்கு ஏற்ப பொருள்களையும் துணிமணிகளையும் வாங்கி வந்து குழந்தைக்கு அன்பளிப்பாக அளிப்பார்கள்.

நம் அனைவரையும் காத்து ரட்சிக்கும் ஆண்டவனே குழந்தையாகப் பிறக்கிறான் இப்பூமியில். அவனைத் தொட்டிலில் இடுகிறார்கள். அப்போது யார் யார் வந்திருப்பார்கள்? என்னென்ன அளித்திருப்பார்கள்?

இதோ பெரியாழ்வார் தனது திருமொழியில் அந்த அரிய விவரங்களைத் தருகிறார்.

**பிரமன் :**

படைப்பு என்னும் தொடக்கத்தைச் செய்பவன் பிரமன். எனவே தான் என்னவோ கண்ணனைத் தொட்டிலில் இடும் திருநாளில் எல்லாவற்றும் அடிப்படையான தொட்டிலை அளிக்கிறான். சாதாரண மரத்தொட்டிலல்ல. மாணிக்கத்தினாலும், வயிரத்தினாலும், பொன்னாலும் செயயப்பட்ட சிறியதும் அழகியதுமான தொட்டில் அது.

**சிவன் :**

இவன் தருவது அழகு தரும் நிறைமணிகளையும் மாதுளம் பூக்களை இடையிடையே கோத்து அமைக்கப்பட்ட தெழ்கு எனப்படும் இடையாபரணம்.

**இந்திரன் :**

தேவருலகத் தலைவன் கண்ணனின் தாமரையைப் போன்றத் தாள்களுக்கு எழில் வாய்ந்த கிண்கிணியை அளிக்கிறான்.

**அமரர் :**

. இந்திரனின் ஆட்சியில் இருந்த தேவபுருஷர்கள் சங்கிற் சிறந்த வலம்புரிச் சங்கையும், சிவந்த திருவடிகளை அழகு செய்யும் சதங்கைகளையும், முன்கைகளில் அணியத் தகுந்த சரிவளையல்களையும், அரை நாணையும், இடைச் சங்கிலியையும் அளிக்கிறார்கள்.

**குபேரன் :**

செல்வத்திற்கு அதிபதியான இவன் திருமாலாகிய கண்ணனுக்கு உரிய ஐம்படைகளாகிய சக்கரம், சங்கு, கதை, வில், வாள் ஆகியவற்றையும் அணிகலன்களான மாலையையும் அளிக்கிறான்.

**வருணன் :**

மழையை வருஷிக்கும் இத்தேவ புருஷன் கடல் முத்துக்களாலான மாலை, உயர்ரக பவளமாலை, கைகளுக்கு உரிய சரிவளை ஆகியவற்றை அளிக்கிறான்.

**பெரிய பிராட்டி :**

இவள் அளிப்பது துளசி மாலை, கற்பக மலர்களால் ஆன திகை மாலை ஆகியவையாம்.

**நிலமகள் :**

இவள் அரையிலே கட்டப்படும் பட்டி, பொன்னாலான உடைவாள், வண்ணப்பட்டாடை, நிறையுள்ள பொன் வளையல்கள், மணிகளாலான நெற்றிப் பட்டம் ஆகியவற்றை அனுப்பினாள்.

**துர்க்கை :**

ஆண்மானை வாகனமாகக் கொண்ட இவள், உடம்பிலே பூசத் தகுந்த வாசனை மிகுந்த கஸ்தூரியுடன் மஞ்சளையும், சிவந்த கண்களுக்கு இடத்தகுந்த மையையும், நெற்றியில் இட்டக் கூடிய சிந்தூரத்தையும் அளித்தாள்.

இவ்விவரங்கள் கண்ணனுக்கு அளிக்கப்பட்டத் திருவாபரணங்களைப் பற்றி மட்டும் கூறவில்லை. அந்த தெய்வக் குழந்தைக்கு வேண்டிய அனைத்து ஆபரணங்களும் அணிகலன்களும் தேவர்களாலும் தெய்வங்களாலும் கிடைக்கப்பெற்றதை உணர்த்துகின்றன.

பெற்ற குழந்தை இல்லையென்றாலும் கிடைத்த குழந்தையைக் கண்போல வளர்த்தவர் பெரியாழ்வார். பெற்ற குழந்தையை விட கிடைத்த குழந்தையின் பேரில் அதிக பாசமும் பரவசமும் வைத்தவர். குழந்தையின் வளர்ச்சியை அணு அணுவாகக் கண்டு உரியவற்றைச் செய்தவர். அதனாலேயே கண்ணனைக் குழந்தையாகப் பாடும்போது எல்லா சிறப்புகளையும் அனுபவரீதியில் சொல்லி வைத்தார். வேறெந்த ஆழ்வாருக்கும் கிடைக்காத குழந்தைப் பேறு ஸ்ரீ ஆண்டாளின் மூலம் இவருக்குக் கிடைக்கவேதான் பிரபந்தத்தை இயற்றும்போது குழந்தைப் பருவத்தின் சிறப்புகளை விவரிக்க விரும்பி கண்ணனின் பேரில் பிள்ளைத்தமிழ் பாடினார்.

அப்பிள்ளைத்தமிழில் மேற்சொன்ன தொட்டில் திருநாள் மட்டுமின்றி அனைத்து பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகளிலும் ஒருவித பூரணத்துவம் நிலவுவதை உணர்ந்து இன்புறலாம்.

திரு. உதயணன்
சென்னை.

# தசாவதாரத் தத்துவம்

*** ஓர் ஆய்வு ***

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்றார் வள்ளுவப் பெருந்தகை. ஒவ்வொரு சொல்லிலும் செயலிலும் உண்மைப்பொருளை உணர்ந்து தேர்ந்து கொள்ளுவது தான் உறுதிப்பாடாகும். எந்த ஒரு செயலும் நற்செயலாக நாட்டிற்குப் பலனுறும் வகையில் அமைத்து, நிலைத்த புகழை நிலைநிறுத்தி வைக்க உறுதுணையாக அமைவது காவியங்கள் ஆகும். அக்காவியங்களே வாழ்வின் முறைகளுக்கு வழிகாட்டும் ஓவியங்களாகின்றன. அறிவியல் இதிகாச காலத்தே உயர்சிறப்புற்றிருந்ததை காவியங்களால் காணும்போது இன்றைய அறிவியலுக்கு அன்றே நம் முன்னோர்கள் அடிப்படையாக அமைந்திருந்ததை எண்ணி வியக்காமல் இருக்க முடியாது.

விண்வெளிப்பயணம், செயற்கை மழை, சோதனைக்குழாய் குழந்தை, கம்ப்யூட்டர்கள், அணுகுண்டு ஆய்வுகள் என்ற இதுபோன்றன இன்றைய அதிவேக வளர்ச்சி சிந்தையைக் கவருகின்றன என்றால் இவற்றை அன்றே இதிகாசக் காவியத்தை உருவாக்கிய அறிஞர்கள் அவ் அறிவியலை பக்தியுடன் இணைத்துப்பரப்பிய பாங்கினைப் புகழ்வதற்கு "ஈ" ஏது?

வேதியல், உயிரியல், இயற்பியல், பண்ணியல், விண்ணியல், எண்ணியல் போன்ற எண்ணற்ற முறைகளாக அறிவியலைப் பகிர்ந்து பயனுறச் செய்திட்ட போதும், அத்தனைக்கும் அடிப்படையாய் இதிகாசங்கள் இயைந்திருக்கின்றன என்றால் அவற்றின் சிறப்பிற்கு ஈடேது? இணையேது?

ஏதோ ஓர் சக்தி என்றும் துணை செய்ய, பக்தியைக் கொண்டே அச் சக்தியின் முழுமையை அறிவியல் கண் கொண்டு ஆய்ந்தறிந்தால் இந்தியர் அறிவும், ஆய்வும் அறிவியல் திறனும், பண்பும் பயனும் பக்தியின் பயனால் ஏற்படும் சக்தியும் உணர்ந்து நாமும் இந்நாட்டிற்குச் சிறிதேனும் பயன்தரப் பணிசெய்து, பக்தியையும் சக்தியையும் பார் முழுதும் பரவிடச் செய்து இந்துமதப் பண்பாடு எல்லா மதங்களுக்கும் மேலான உயர் தனிச் சிறப்புக் கொண்டது என்பதை விளக்கிட வேண்டாமோ?

உலகில் உள்ள உயிரினம் யாவும் முத்தொழில் கொண்டு முழுமைபெறுகின்றன. பிறத்தல், காத்தல், அழிதல் ஆகிய இம் முத்தொழில் எல்லா உயிர்கட்கும் பொதுவெனினும் மனிதன்மட்டுமே தனித்தன்மை கொண்டு, பிற உயிர்கட்கு உயர்ந்தவனாக, அடக்கி ஆள்பவனாகவும், அடக்கம் உடைய ஆன்ம பக்திமானாகவும், அறிவின் எல்லையை ஆய்ந்து காணும் அறிஞனாகவும் திகழ்கின்றான். இதனாலன்றோ மனிதன் மட்டுமே தனக்கென ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்று, உடல் அழிந்தாலும் ஆன்மா அழியாதநிலைபோல புகழால் நிலைக்கிறான். அப்புகழுக்கு அடிப்படை இலக்கியமன்றோ? இறவாத இலக்கியமாகிய இதிகாசங்களின் பெருமையை எவர்தான் மறுக்க முடியும்?

ஏன்? எப்படி? எதற்காக? என்ற விளக்கங்களைத் தொகுத்து ஒவ்வொரு மனிதனும் அறிவின் ஆய்வுகளால் அறிவியல் முறை கண்டும், ஆற்றல் நிரம்பும் பக்தியினால் பெருகும் சக்தியையும் கண்டறிந்து, உண்மைக் கருத்துக்களை உலகிற்கு எடுத்துக்காட்டி தான் மட்டுமின்றி தன் இனமான மனித இனம் மேன்மையுற வழிவகுத்த நூல்களே இதிகாசங்கள்.

மேலை நாடுகள் காட்டி வரும் அறிவியல் முன்னேற்றம் கண்டு புகழ்கின்றோம். விண்ணிலே உலாவரும் விமானம், ராக்கெட் போன்றவை அன்றே இதிகாசத்தில் இருப்பவை தானே! இன்று மனித சக்தியால் உருவாக்கப்பட்ட யந்திரங்கள் பயனாகின்றன. அன்று மனித சக்தியே பக்தியின் சித்தியால் யந்திரகதி மிக்கச் செயல்களை உருவாக்கி உயர்வடைய முடிந்தது. இந்திர விமானம், புஷ்பக விமானம் போன்றவையும், ஒரு அம்பு அக்னி அஸ்திரமாக, ஒரு அம்பு வாயு அஸ்திரமாக, மற்றொன்று நீரினைப் பொழியும் அஸ்திரமாக, பிறிதொன்று மயக்கமுறச் செய்ய, வேறொன்று மயக்கத்தை தெளியப்படுத்த, அப்பப்பா! எண்ணிப் பார்த்தால் அதில் அடங்கியுள்ள ஆய்வுகள் எண்ணிலடங்காத் தன்மையின. ஓர் அம்பில் வெப்பத்தைத் தரும் சக்தியைப் பெற வேதியல் துணையன்றோ?

"சக்தி" என்பது இறைமையாகப் போற்றுவதற்கு உரிய தெய்வம் எனக் கொண்டோம். அச்சக்தி உலகின் எல்லாப் பொருள்களின் அளவோடு வியாபித்து உள்ளது. அச்சக்தியை ஆய்ந்து பயன் படுத்தியவர்கள் ஆன்ற ஞானியர் எனவும், முற்றும் உணர்ந்து முழுமை பெற்றவர்களே முனிவர்கள் என்றும் உணர்த்திட்ட முறையால், முனிவர்கள் இயற்றிய வேதங்கள் இதிகாசங்கள் அழியா நிலை பெற்று அற்புத சக்திகளை அறிவுறுத்துகின்றன.

மனித இனம் அறிவியலை ஆதாரமாகக் கொண்டு, இறைவனைக் காணும் தன்மையை இந்திய நாடு தான் முதன்முதலில் கண்டறிந்தது என்ற உண்மையினை, இதிகாச வடிவிலே இறைவனின் அற்புதங்களோடு இணைத்துத்தந்த இந்து மதம்

திரு. வெ. சுந்தரம்
தேவிசாத்த நல்லூர்.

எத்துணை மகத்தான ஆற்றலை இவ்வுலகிற்கு அளித்துள்ளது!

ஏழு குதிரைகள் பூட்டிய ஒற்றைச் சக்கரத் தேரில் சூரியபகவான் பவனி வருவதாகக் கூறினர். ஆம், ஏழு நிறங்கள் ஒன்று கூடிய ஒரு திகிரி வேகமாகச் சுழன்றால் வெண்மை தான் ஒளிரும். இவ்வேழுநிறக் கதிர்கள் மனித உடலுக்கு உரம் நல்கி நோய் நீக்கும் தன்மையன. எனவே சூரிய மஸ்காரம் செய்யவும் பணித்தனர். அத்தோடு பரம்பொருளின் சக்தியும் நமக்குச் சித்தியாகின்றது. கோள்களின் பாதை, கூடுங்காலம், அதன் பயன்கள் ஆகியன அறிவியலில் காணும் எண்ணியல் பயன் தானே! சித்த வைத்தியம் என்பது யாது? இறைவன் கருணையால் சித்தி பெற்ற சித்தர்கள் தம் போன்று அனைத்து மானிடரும் பயன்பெற சித்தமருத்து வமும் கண்டு உயிரியல் உயர்வடைய வழிவகுத்தனர்.

தசாவதாரம் மட்டும் ஓர் சிறு குறிப்பிற்காக! ஆய்வினைக் கொள்வோம்.

கதைப்படைப்போ, இதிகாசமோ எதுவாயினும் அதில் வரும் கதா நாயகன் கதாநாயகிதான், கருப் பொருளாகக் கொண்டு கூற வந்த கருத்தை வெளிப்படுத்தப்படுவது நாம் கண்கூடாகக் காணும் உண்மை. அதுபோல் தசாவதாரத்தில் குறிப்பிடப்படும் பத்துவித அவதாரகுணங்களை ஆய்ந்தால் பக்தியுடன் அறிவியல் இணைந்த தன்மை நன்கு விளங்கும். அறிவியல் அறிஞர்கள் கூற்றுப்படி இப்பரந்த உலகில் முதலில் நீர் வாழ்வன தோன்றியது என்பதை தசாவதாரத்தில் முதல் அவதாரமான மச்சாவதாரம் விளக்குகிறதல்லவா!

அடுத்தது கூர்மாவதாரம் தசாவதாரத்தில் காட்டப்படும் இறைவனின் திருஅவதாரம். அறிவியல் கூற்றுப்படி நீரிலும் நிலத்திலும் வாழும் தகைமை பெற்ற உயிரினம் ஆமை. எனவே இறைவன் கொண்ட இரண்டாம் அவதாரமான "கூர்மாவதாரம்" சிறப்பாகக் காட்டப்பட்டது.

நிலவாழ் பிராணி உலகில் தோன்றிய போதிலும், நீரின் துணை நாடி நிற்கும். நிலத்தன்மைகளுக்கு உடல் ஈடுகொடுக்க ஏற்புடைய உடலின் தோல் கடினமாகவும் நிலத்தை அகழ்ந்து நோக்கும் தன்மையும் கொண்டது உயிரினமாக வராக அவதாரம். ஆம் இறைவன் எடுத்த மூன்றும் அவதாரம் வராகம்அன்றோ! நீரினுள் மூழ்கி உலகத்தை வெளிக் கொணர்ந்தது வராகமன்றோ? அதற்கடுத்ததாக மிருகஇனங்கள் பெருகிய பின் மனிதனும் மிருகமுமாகக் கலந்த நிலையான உயிர் தோன்றியிருக்க வேண்டுமல்லவா? ஆம்! அந்த உண்மையினை உணர வைத்திடவே ஸ்ரீநரசிம்மாவதாரம் தோன்றிய தென்பதை மறுக்கமுடியாதே! உடல் நரனாகவும் தலை சிம்மமாகவும் பரிணும வளர்ச்சியைக் காட்டுவதற்காக நாசிம்மமாக இறைவனது திரு அவதாரமாக தோன்றியது.

ஐந்தாவது திருஅவதாரம் வாமன அவதாரம். வாமனன் என்றால் குட்டையான உருவம் உடையவர் என்ற பொருள் அல்லவா! மனித இனம் முதன் முதலாகத் தோன்றிய போது உருவம் மிகச் சிறிய உருவமாகத்தானே அமைந்திருக்க முடியும் என்ற அறிவியல் கூற்றை ஆதாரமாக்கிட ஆண்டவன் கொண்ட அரிய அவதாரம் வாமன அவதாரம் என்றால் ஆச்சரியம்தான் ஏற்படுகிறது.

ஆறாவதாக பரசுராமன் அவதாரம். மனிதன் தோன்றி வளர்ந்திட்ட போதும் அறிவு பூர்ணமாக வளரா நிலையில் அமைந்த தன்மையையும் ஆயுதங்களைக் கொண்டு எதிரிகளைத் தாக்கும் ஆவேசம் நிறைந்த நிலையில் வாழ்ந்த தன்மையை எடுத்துக் காட்டவே பரசுராம அவதாரம் எடுத்து இறைவன் காட்சி தந்து நம்மைக் காணச்செய்கிறார்.

ஏழாவதாகக் காட்டப்படுவது ஸ்ரீராம அவதாரம். மனிதப் பிறவியின் உயர்வும், பண்பும், வாழும் முறையையும் விளக்கும் தத்துவத்தின் சாரமாக, ஒருவனுக்கொருத்தி



திருமதி. சாந்தாநாராயணன் அவர்களின் நீர் மேல் கோலம் உள்ளிட்ட 'ரங்கோலி' கைவண்ணம்

யென்ற உயர் பண்பை விளக்கும் அவதாரம். அம்மட்டோ! குடியாட்சி மலரச் செய்த, ஆட்சி முறைக்கு அரியதோர் எடுத்துக்காட்டாக அமைந்த அவதாரம் ஸ்ரீராம அவதாரம். கம்பநாடன் பாடலில் ஸ்ரீராமபிரானுக்கு முடி சூட்டுவதாக அமைந்த பாடலில் அரியணையை அனுமன் தாங்க, அங்கதன் உடைவாள் ஏந்துகிறன். லட்சுமணனும் சத்ருக்கனனும் கவரி வீசுகிறர்கள் சடையப்ப வள்ளலின் முன்னோரில் ஒருவர் கிரீடத்தை எடுத்துத் தர வசிட்டன் புனைந்தான் என்பது பாடலின் கருத்து "வசிட்டனே புனைந்தான் மௌலி," என முடியும் அப்பாடலில் ராமனை மட்டும் காணேம்! ஏன்? ராமன் பெயரைச் சேர்க்கக் கம்பர் மறந்து விட்டாரா? இல்லை அங்குதான் மக்களாட்சி மலர வித்திட்டார். யாருக்கு முடிசூடப்பட்டதெனக் கூருது மக்கள் ஒவ்வொருவருக்கும் ராம ராஜ்யத்தில் உரிமை தந்து ராமனை நினைப்பவர்கள் ராம ராஜ்யத்தில் ஓர் மன்னனே என சுட்டிக் காட்டி பக்தி தோன்றிட வழிவகுத்தார். எனவே அவதாரங்களில் சிறந்ததாக,மக்களாட்சி மலரச் செய்த ராம அவதாரம் போற்றப் படுகிறது.

அடுத்து பலராமாவதாரம். அவர் ஆயுதமோ கலப்பை. உழுதொழில் மேன்மை, உற்பத்தித்திறன் விளக்க வந்த அவதாரமாகவும் பாசப் பிணைப்புகளையும் நேசமுடன் விளக்கியது பலராம அவதாரம்.

ஒன்பதாவதாக ஸ்ரீகிருஷ்ண அவதாரம். இறைவனைச் சார்ந்தோருக்குத் துன்பங்கள் பொடிப் பொடியாகும் என்னும் அரிய கருத்தை வலியுறுத்தி, இறைவனை எதிர்த்தவர்கள் அழிவுறு நிலையைக் காட்டி, இறைவன் குழந்தை வடிவிலும் உள்ளான், கொள்ள முடியாப் பெரு உருவிலும் உள்ளான் எனக்காட்ட விஸ்வரூப தரிசனங்கள் காட்டி நமை ஆட்கொள்ள கீதையைப் புகட்டியது ஸ்ரீகிருஷ்ண அவதாரம் அல்லவா?



ஸ்ரீபிரம்மா மற்றும் சக்திகள் (சுதையில்)
திரு. வி. முத்துராமன் - கோவை.

மனிதனின் வளர்ச்சியில் அதி வேகச் செயல்களும், போட்டிகளால் ஏற்படும் போர்களும் விரைந்து பணி முடிக்க செறிந்திட்டது இக்காலம். அதுவே கலிகாலம். எனவே கல்கியவதாவரம் காட்டப்பட்டுள்ளது எனின் எத்துணைப் பொருத்தம்.

இப்படி அவதாரப் பெருமைகளை விளக்கும் தசாவதாரக் காட்சி அறிவியல் கூற்றுக்கு ஏற்ப பரிணும வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு அறிவியல் ஆய்வுகள் தோன்றுவதற்கு முன்பே ஆய்ந்தறிந்த ஞானியர், இதிகாசத்தில் பக்தியுடன் பரமனைப் பணிவதோடு, பார்புகழ் தத்துவங்களோடு திரு அவதாரச் சிறப்புக்களை அவனியில் உள்ளோர் அறிந்து முறையினில் செயல்பட விளக்குகின்றனர்.

இறைவனைவழிபடும் திருக்கோயில் களின் திருச்சுற்றுக்கள் வரும் பகுதிகளில் மூலிகைச் செடிகள், மலர்ச் செடிகள் அமைக்கப்பட்டதைக் காணும் போது இறை பக்திக்கும் அறிவியலுக்கும் உள்ள ஒற்றுமைகள் உணரப்படுகின்றது. அறிவின் கூர்மையால் அறியும் அறிவியல் உண்மை போன்று,ஆழ்ந்த பக்தியின் மூலம் இறையின் இனிமையைப் பெற முடியுமே!

அறிவின் திறத்திற்கு உட்பட்ட அறிவியல் போல அறிந்து ஆழ்ந்து செய்யும் பக்தியின்மூலம் ஆண்டவன் நாளும் பக்தர்க்கு ஆட்பட்டு முக்தியினைத் தரல் உண்மையன்றோ!

# பவித்ரோத்சவம்

அறக்கொடைகள் பல அன்று பெற்று, திருமலையில் இன்று வரை நடைபெற்று வரும் பல வருடாந்திர கோயில் விழாக்கள் பற்றிய செய்திகள் திருமலைக் கோயில் கல்வெட்டுகளிலிருந்து தெரிய வருகின்றன. இவ்வகையில், 'பவித்ரோற்சவம்' பற்றிய செய்திகளும் கல்வெட்டுக்களின் மூலம் நன்கு தெரிய உள்ளன. ஆனால் இவ்விழா 1962 முதல் தொடரப்பட்ட வரை, இடையில் ஏன் கொண்டாடப்படவில்லை என்பதற்கு எந்தவித காரணங்களும் தெரியவில்லை. 'பவித்ரோற்சவம்' என்ற பெயரே புனித விழா என்று குறிக்கிறது. அதாவது கோயிலில் தினமும் நடைபெறும் இறைவழிபாட்டிலும், சமயச் சடங்குகளிலும் தெரிந்தோ தெரியாமலோ நடைபெறும் குற்றங்குறைகளினால் ஏற்படும் தீமைகளைத் தடுக்கவே இவ்விழா கொண்டாடப்பட்டது. இப்புனித விழா ஸ்ராவண சுத்த தசமி நாளில் நடைபெறும். இது நான்கு நாட்கள் நடைபெறும். திருமலையில் முதன் முதலாக கி. பி. 1463-இல் சாளுவ நரசிம்மன் காலத்தில் சாளுவ மல்லய்யதேவ ராஜாவினால் புகுத்தப்பட்டது: (157-T-T): முழுதும் புதிதாக புகுத்தப்பட்ட அங்குரார்ப்பணத்துடன் சேர்த்து 5 நாட்கள் கொண்டாடப்பட்ட—இவ்விழாவைப்பற்றிய முழுத் தகவல்கள் நமக்குக் கிடைத்துள்ளன.

இந்நாட்களின்போது, ஊதியம் அளித்து நியமனம் செய்யப்பட்ட அறிஞர் பெருமக்களைக் கொண்டு வேத மந்திரங்களும், புராணச் சொற்பொழிவுகளும் நடத்தப்பட்டன. இத்திருவிழா பற்றிய செய்திகளை வழங்கும் கல்வெட்டு ஒன்று திருமலைக் கோயிலின் முதல் பிரகாரத்தின் வடக்குச் சுவற்றில் உள்ளது. இதில், திருமலையில் நன்கு அலங்கரிக்கப்பட்ட திருமாமணி மண்டபத்தில், பவித்ரம் அணியப் பெற்ற மலையகுனிய நின்ற பெருமாளையும், நாச்சிமார்களையும் எழுந்தருளச் செய்து, பின்பு திருமலை மாட வீதிகளில் அவர்களின் திருவீதி திருவுலா நடைபெற்றதும், இத்திருவிழாவிற்காக 193½ பணம் செலவு செய்யப்பட்டதும் விளக்கப்படுகின்றன. திருமலைக் கோயில் சுவற்றில் உள்ள 15-ம் நூற்றுண்டைச் சார்ந்த கல்வெட்டு ஒன்றும், திருப்பதி கோயில் கல்வெட்டு ஒன்றும் இவ்விழா பற்றிக் கூறுகின்றன. அதற்குப் பிறகு எழுந்த எந்த கல்வெட்டுகளிலும் இவ்விழா பற்றிய எந்தச் செய்தியும் காணப்படவில்லை. ஆனால் இவ்விழா மற்றைய வைணவத் தலங்களான காஞ்சி, திருவரங்கம் கோயில்களில் பன்னெடுங்காலமாக வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. ஆவணி மாதம் சுக்ல தசமி நாள் இரவன்று நடத்தப்படும் அங்குரார்ப்பண நாள் தவிர்த்து இவ்விழா 5 நாட்கள் கொண்டாடப்பட்டது. 5-வது நாளான ஆவணி பௌர்ணமியை (சிராவண பௌர்ணமி) முதல் மூன்று குலத்தார் புனித நாளாகக் கொண்டாடினர். தற்போது இவ்விழா 1962 முதல் திருமலையில் ஒவ்வொரு வருடமும் 4 நாட்களுக்கு கொண்டாடப்படுகின்றது.

கோயிலின் ஆன்மீகச் சூழ்நிலையை தொடர்ந்து நிலவச் செய்யும் பொருட்டு ஒவ்வொரு ஆண்டும் இவ்விழா கோயில் அரங்கினுள் மேற்கொள்ளப்படும். கி. பி. 1464-ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டுக் குறிப்பு ஒன்றிலிருந்து இவ்விழாவைப் பற்றிய முதற் செய்தி காணப்படுகின்றது. இக்கல்வெட்டுக் குறிப்பிலிருந்து மேலும் நாம் அறிவதாவது; இவ்விழா ஆவணி மாதத்தில் 5 நாட்கள் வேத கோஷங்களுடனும் மந்திர ஒலிகளுடனும் திருமலைக் கோயிலில் நடைபெற்று வந்தது. இக்கோயில் வருவாய்க்கென ஏலம்பாக்கம் என்னும் கிராமம் மானியமாக வழங்கப்பட்டது என்பதும், மேலும் ஏலமண்டியம், விக்ரமாதித்திய மங்கலம் எனும் ஊர்களிலுள்ள கோயில் நிலங்களுக்கு நீர் பாசன வசதிக்கு மேற்கூறிய கிராமத்தில் இரண்டு ஊற்றுக் கால்வாய்கள் தோண்டப்பட்டன என்றும், இவற்றினால் பெறும் வருவாய் இக்கோயிலில் நடத்தப்படும் 'பவித்ரோற்சவம்' விழாவிற்கு செலவிடப்பட்டது என்றும் கூறுகின்றது.

ஏகாதசி நாளன்று உற்சவ மூர்த்தி திருமாமணி மண்டபத்தை

---

திரு. எஸ். நடராஜன்—சித்தூர்.

---

இறைவன் பவித்ரத்தால் (திரித்த புனித நூலால்) அலங்கரிக்கப்பட்டு தனது நாச்சிமார்களுடன் திருவீதி வலம் வருவார். 'விஷ்ணு பவித்ராரோணம்' என்று கூறப்படும் ஆவணி மாதம் சுக்ல துவாதசி நாளன்று இறைவன் யஞ்ஞ பவித்ரத்தால் அலங்கரிக்கப்படுவார். இவ்விழா நாட்களின்போது ஒவ்வொரு நாளும் கோயில் அரங்கினுள் வேதங்கள் ஒருபுறம் ஓதப்பட, மறுபுறம் புராணச் சொற்பொழிவுகள் நடைபெற, வளர்க்கப்பட்ட ஹோமத் தீ எங்கும் காற்றினில் கலந்து சூழ்ந்திருக்க கோயிலின் சுற்றுப் புறச்சூழ்நிலை பக்தியின் எல்லையைத் தொடும்.

அவ்வகையில் இவ்வாண்டு 'பவித்ரோற்சவம்' 26-8-85 முதல் 28-8-85 வரை மூன்று நாட்கள் திருமலையில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படும். இதுபோது யாத்திரிகர்கள் திருமலைக்கு வருகை புரிந்து ஏழுமலையானின் தரிசனம் பெறுவது என்பது சிறந்ததாகக் கருதப்படும். ❀

# ஞான யோகம்

'உலகப் பொருள்களின் பின் சென்று இன்பம் எங்கே இன்பம் எங்கே என்று ஓயாமல் அலையும் மனிதா! நீ ஏன் கானல் நீருக்காக அலைகிறாய். இன்பத்தின் இருப்பிடமான இறைவனைத் தேடிக் கண்டு கொள். அந்த இறைவன் உனக்குப் புறம்பாக எங்கேயும் இல்லை; உன்னுள்ளேயே இருக்கிறான். நான் நான் என்ற அகங்காரத்தையும், ஆணவத்தையும் விட்டொழித்த அந்தக் கணமே நீ இறைவனை உணர்ந்து கொள்வாய். நீ செய்ய வேண்டியது ஒன்றுமில்லை' என்கிறார் ஞானகுரு ஸ்ரீ ஆதிசங்கரர்.

ஞான யோகத்திற்கும், பக்தி யோகத்திற்கும் வேற்றுமை தோன்றுவது ஆரம்பத்திலேதான். மேலான பக்திக்கும், மேலான ஞானத்திற்கும் வேற்றுமையில்லை. கடவுளை அன்புருவாக காணுதலே பக்தி. இறைவனுடைய அன்பாகிய உருவத்தை எல்லாவிடத்தும் எப்பொருள்களிலும் காண்பவன் ஞானியாவான். பரஞான நிலையில் ஒருவன் எப்பொருளையும் தானாகக் காண்கிறான். நான் என்ற அகங்காரம் ஒழிந்தாலன்றி, இந்த நிலை கை கூடாது.

குணங்களைக் கடந்து அப்பாலாகி நிற்கின்ற சிந்தையை உடையவனுக்கு விதி எது? விலக்கெது? என சங்கராச்சாரியார் சொல்கிறார். ஆன்ம ஞானத்தை அடைவதே பிரதானம். அதுவே எய்துவதற்குரிய பேறு என்பதை அறிய வேண்டும்.

ஆயிரம் சமய சாஸ்திரங்களைக் கற்றாலும் உண்மையாகிய தியாக புத்தி உன் உள்ளத்தில் உதிக்காவிட்டால் உனது வாழ்க்கை வீணாகி விட்டதென அறிந்து கொள்வாயாக. ஆன்ம ஞானத்தை அடைகின்ற கருமத்திலே சிரத்தையோடும், முழு மனதோடும் முயல்வாயாக.

இந்த வாழ்விலேயே ஆன்ம ஞானத்தை அடைய முடியுமா? என சிஷ்யர் கேட்ட கேள்விக்கு ஸ்வாமி விவேகானந்தர் பகன்றதாவது:

"உண்மையான சிரத்தை இருக்குமாயின், இந்த வாழ்விலே நிச்சயமாக நீ ஆன்ம ஞானத்தை அடைவாய். ஆனால் ஆண்மையோடு முயலுதல் வேண்டும். எப்படி முயல வேண்டும். என்பதை அறிவாயா? நான் நிச்சயமாக ஆன்ம ஞானத்தை அடைவேன்; என்ன தடைவரினும் அதனை வென்று விடுவேன் என்னும் துணிவே புருஷாகாரம் எனப்படும். 'என்னுடைய தாய் தந்தையர், நண்பர், சகோதரர், மனைவி, குழந்தை ஆகியோர் இறந்தாலும் சரி; இருந்தாலும் சரி ஆன்ம தரிசனம் பெற்றாலன்றி நான் திரும்ப மாட்டேன்' என்னும் தீர்மானத்தோடு தன்னுடைய இலக்கினை நோக்கி முன்னேறிச் செல்லுதலும் பிற எண்ணங்களைப் பொருட்படுத்தாது விடுதலும் ஆண்மையோடு கூடிய முயற்சியாகும். மனிதன் ஆன்ம ஞானத்தை அடைவதற்காக இந்த உடலைப் பெற்றிருக்கிறான். நீ மரணத்தை வெல்வதற்காக வந்திருக்கிறாய். வீரனைப்போல் முன்னேறிச் செல். எது நிகழ்ந்தாலும் நிலையில் திரியாதே. விழித்தெழுந்து கருதிய குறிக்கோள் கை கூடும் வரை ஓய்வின்றி உழை' என்கிறார்.

**தென்னாறு ஜி. இராமநாதன், பி. ஏ.**

அறிந்தோ அறியாமலோ செய்த எல்லா பாவச் செயல்களுக்கும் நிச்சயமாக அழிவை உண்டாக்கவல்லது ஞானம் தான்.

இறைவனுக்கு அன்னியமாக வேறு எதுவும் இல்லை; அனைத்தும் இறைவனே.

உள்ளது ஒன்றே; அதுவே பரம்பொருள். ஏனைய அனைத்தும் அந்த ஒரே பரம்பொருளின் பல வடிவங்கள். தனக்குள் இருக்கும் ஆத்மாவைப் பற்றித் தனக்குத் தானே தீவிர விசாரணையில் ஈடுபடுவது ஆத்ம ஞானத்திற்கு வழி வகுக்கும்.



ராமேஸ்வரத்தில் சூரிய உதயம்
திரு. வி. முத்துராமன் - கோவை

எதை அறிந்து கொள்ள வேண்டுமோ அது பாலில் இருக்கும் இனிப்பைப் போன்று நம்மிடமே இருக்கிறது.

மானிட வர்க்கத்துக்கு ஆத்ம பாவத்தோடு சளையாது செய்யும் சேவை, பரந்த சகிப்புத் தன்மை, எல்லையிலாப் பணிவு, சமரஸ அன்பு, அகிம்சை, சத்தியம், தங்கு தடையில்லாத தன்னிச்சையான தயாள குணம், பரிபூரண பிரம்மச்சர்ய அனுஷ்டானம், அசைக்க முடியாத நம்பிக்கை, தீவிரமான குருபக்தி, உண்மையையும், அல்லாததையும் பகுத்தறியக் கூடிய விவேகம், தகிக்கும் வைராக்யம் தீவிர முமுக்ஷுத்துவம் அல்லது விடுதலை வேட்கை, இடையறாத கடுமையான ஆத்ம தியானம் ஆகிய இவைகள் ஞானக் கோயிலுக்கு அழைத்துச் செல்லும் படிகள்.

சரீர அபிமானங்களையும், குடும்ப பற்றுதல்களையும் உலக ஆசைகளையும், தொடர்புகளையும், கீர்த்திகளையும், கௌரவங்களையும் துறந்து தன் உண்மை நிலையை அறிந்தவன் ஞானியாகிறான்.

பல்புகள் பலநிறம், மின்சக்தி ஒன்றே. உடல்கள் பலவிதம்; உள்ளுயிர் ஒன்றே. மனம் எதனால் நினைப்பதோ உடல் எதனால் உயிர்ப்பதோ அந்த ஆத்மா ஒன்றே. ஒன்றை அறிந்தவனுக்குச் சோகமோகமில்லை. அவனே ஞானி.

''இரவும் பகலும் அறிந்தோ அறியாமலோ நித்த, சுத்த, முத்த சுயம் பிரகாசமாகிய ஆன்மா நானே'' என்று நினைப்பவன் பிரம்ம ஞானி ஆகிறான்.

''ஞானமென்பதும், மோக்ஷமென்பதும் என்னவோ ஏதோ என்று பிரமிக்காதே. நித்திய, பரிபூரண ஸ்வரூபியாக விளங்கு''.

''சாப்பிடும் பொழுது நாக்கினால் சுவையை அறிகிறவன் யாரோ அவனை அறிந்தால் அது தெரியும்'' என்கிறார் மகான் ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமிகள்.

விடுதலை அல்லது மோட்சம் என்று கூறுவது ஒருவன் பிரம்மத்தோடு தனக்கு அமைந்திருக்கிற உண்மையான தன் சொந்த இயல்பை அறிந்து கொள்வது என்பது தவிர வேறு எதுவுமில்லை.

எதை அடைந்தபின் இன்னொன்று வேண்டும் என்ற ஆசை லவலேசமும் இருப்பதில்லையோ அப்படிப்பட்ட நிறைந்த நிறைவாக இருப்பது தான் பூரண ஞானம்.

துக்கம் என்பதே தன்னைத் தொடாமல் எவன் ஒருவன் இருக்கிறானோ அவனே யோகி, ஞானி.

எவன் துன்பத்திலும், இன்பத்திலும் சமமானவனோ, தன்னிடம் நிலைத்தவனோ, ஓடு, கல், பொன் இவற்றை சமமாய் பாவிப்பானோ, விருப்பையும், வெறுப்பையும், ஒன்றாய்க் கருதுபவனோ, திடசித்த முடையவனோ, தன்னை இகழ்வதையும், புகழ்வதையும் ஒன்றாய்க் கொண்டவனோ, மானத்திலும், அவமானத்திலும் சமபாவனை உடையவனோ, மித்திரனிடமும், சத்துருவிடமும் சமமான ஆசை வயப்பட்டு ஆரம்பிக்கும் எல்லாக் கருமங்களையும் விட்டவனோ அவனே ஞானி என்று சொல்லப்படுகிறான். இதற்கு உதாரணமானவர்கள் சுகர் முனிவர், ஜடபரதர் ஆவர். ★

## சூரியனுக்கு ஒரு கோவில்-கோனார்க்

இந்தியாவில் சூரியனுக்குக் கோவில்கள் மிகக்குறைவு. அவைகளில் மிகவும் பிரசித்தமானது ஒரிஸ்ஸா மாநிலத்தில் உள்ள கோனார்க் என்ற இடத்தில் உள்ளது. கட்டக் என்ற நகரின் சமீபம். இங்குள்ள கோவிலுக்கு சூர்ய மந்திரம் எனப் பெயர். இதை ஆங்கிலேயர் Black Pagoda என்று கூறி வந்தனர் கருப்புக் கற்களால் ஆனது. இந்திய கோவில் கலைக்கு எடுத்துக் காட்டு. 9-ம் நூற்றாண்டில் கேசரி வம்ச அரசர்களால் கட்டப்பட்டு 13-ம் நூற்றாண்டில் கங்கா வம்ச அரசனான முதலாம் நரசிம்ம தேவனால் பழுது பார்க்கப்பட்டு விரிவாக்கப்பட்டது. அவன் இக்கோவிலில் நாட்டிய அரங்கமும் கட்டினான். 1200 கலைஞர்கள் 16 ஆண்டு உழைத்து இக்கோவிலை கட்டினார்கள். அக்காலத்தில் 40 கோடி ரூபாய் செலவாயிற்று என்று பூரி ஜகந்நாத்தில் உள்ள கணக்குகள் கூறுகின்றன. கோவிலின் உயரம் 230 அடி. இப்போது இருப்பது 130 அடி உயரமுள்ள முகசாலை மட்டுமே. சூரியனுக்காக கட்டப்பட்ட இக்கோவிலில் பழுது அடைந்தது போக மிகுதியுள்ள பாகங்களே நம்மை பிரமிக்க வைக்கின்றன.

24 சக்ரங்கள் கொண்ட ரதம் போல் அமைக்கப்பட்டுள்ளது கோவில். சூர்ய பகவானின் சிலைகள் 3 உள்ளன. அழகான வேலைப்பாடு கொண்டவை ஒரே கல்லால் ஆனவை குதிரைமீது அமர்ந்து இருப்பது போல் ஓர் சிலை உள்ளது. நர்த்தன சாலையில் சிற்பங்கள் பல உள்ளன. குதிரைகள் மற்றும் யானைகளின் சிலைகள் சிற்பங்கள் பிரம்மாண்டவையாக உள்ளன. புதை பொருள் ஆராய்ச்சி இலாகா இங்கு சில சிற்பங்களைப் பாதுகாத்து வருகின்றது. 18 அடி நீளம் 4 அடி அகலம் 15 அங்குல கனம் உள்ள ஒரே கல்லில் நவக்கிரகங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இதற்கு 'நவக்கிரக பாடா' என்று பெயர். அம்மானுக்குப் பெயர் 'ரமாசண்டி'. அம்பாள் கோவில் பாழடைந்து காணப்படுகின்றது. குதிரைமீது அமர்ந்து கையில் தாமரை ஏந்திய சூர்ய நாராயணர் உருவம் உளது. இக்கோவில் 7 ஏக்கர் நிலப் பரப்பில் கட்டப்பட்டுள்ளது.

தகவல் : திரு. என். ராமகிருஷ்ணா-மயிலாடுதுறை.

## மதிப்புரை

# ஆசாரிய ஹிருதய சாரம்

(ஆசிரியர்: கோ. பாலசுந்தரநாயகர்,
கோ. பா. ஆனந்தகிருஷ்ணன், 5/104 F சமத் காலனி.
அண்ணாபுரம் - சேலம் - 4 விலை; ரூ. 12/-

அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் அரிய நூல் ஆசாரிய ஹிருதயம். அதற்கு மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ள உரை விரிவும் பொலிவும் மிக்கது. அவ்வழகிய உரையினை இருமொழிப் புலமையும் திவ்வியப் பிரபந்தப் பயிற்சியும் உடையாரே முற்றும் சுவைத்து மகிழ முடியும். ஆசாரிய ஹிருதயத்தின் கருத்துகளைப் பொது மக்களும் அறிந்து இன்புறும் வண்ணம் எளிய தமிழில் ஆக்கித் தந்துள்ளார் திரு. கோ. பாலசுந்தர நாயகர். அந்த வகையில் ஆசாரிய ஹிருதய சாரம் (தெளிவு) என்னும் அவரது இந்நூல் வைணவ உலகத்துக்கு ஒரு நன்கொண்டை எனலாம்.

இந்நூல் நான்கு பகுதிகளைக் கொண்டது. இதில் முதலில் சூத்திரம் அதனை அடுத்து விளக்கம் என்னும் அமைப்பில் எல்லாச் சூத்திரங்களும் விளக்கப்படுகின்றன. நம்மாழ்வார் கொண்ட சோகம் (சூ. 58), ஆழ்வார்களுக்கும் இருடிகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடு (சூ. 61), வேதத்தினும் திருவாய் மொழிக்குரிய ஏற்றம் (சூ. 72, 73), நம்மாழ்வார் பிறந்த இடத்தின் பெருமை (சூ. 79), வைணவ அடியார் சிறப்பு (சூ. 85) திருவாய்மொழியும் கீதையும் (சூ. 189) ஆகியவற்றைப் பற்றி எழுதியுள்ள விளக்கங்கள் தெளிவும் அழகும் உடையன.

அங்கங்கே இன்றியமையாத பல வடசொற்களுக்கும் தொடர்களுக்கும் சொற்பொருள் எழுதியுள்ளமை இன்னொரு சிறப்பு. நிருபகம், வியபதேசம், கூடஸ்தர், ஏக கண்டர்கள், ஆதித்யன், திவாகரன், பாநு, பாஸ்கரன், புரோடாசம் முதலான வடசொற்களுக்கு நல்ல தமிழில் பொருள் தரப்பட்டுள்ளது. வஸ்து நிர்த்தேசம் என்பதற்குப் பொருளியல் உரைத்தல் என்று (சூ. 213) தமிழாக்கம் செய்துள்ளமை பாராட்டத்தக்கது. இறைவன் குணங்களுக்குத் தந்துள்ள பொருள் விளக்கம் (சூ. 218) பயனும் சிறப்பும் வாய்ந்தது.

இத்தகு நூலில் போதுமான அளவு விளக்கம் அமையாத இடங்களும் (சூ. 9, 32, 55) உண்டு. சூத்திரம் 14 இன் விளக்கத்தில் கடைசித் தொடர் முடியாமலே நிற்கிறது.

உயர்ந்த கருத்துகளைச் சொல்லும் இந்நூலில் அச்சில் வெவ்வேறு எழுத்துக்கள் கலந்துள்ளமையும் (wf) பக்கத்துக்குப் பக்கம் எழுத்துப் பிழைகள் மலிந்துள்ளமையும் படிப்பவர்களுக்குப் பெருந்துன்பமாக உள்ளன. பிழை திருத்தத்தில் குறிக்கப்படாமல் உள்ள பிழைகள் பல உள்ளன. சூத்திரங்களில் கூட எழுத்துப் பிழைகள் காணப்படுகின்றன. அடுத்த பதிப்பில் பிழைகள் திருத்தப்பட்டால்தான் நூலின் சிறப்பு ஓங்கும்

எனினும், நம்மாழ்வாரின் நெஞ்சத்தையும் அவரது நூலின் சிறப்பையும் உயர்வையும் அறிய விழைவார்க்கு இந்நூல் ஒரு நல்ல துணையாகும்.

தெ. ஞானசுந்தரம், சென்னை



ஸ்ரீ அஷ்டலக்ஷ்மி கோயில் - அண்ணாமலைபுரம், சென்னை.
திரு ஜெகதீஷ்-திருப்பதி.

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

8

## ஆசார்ய புருஷ லக்ஷணம் :

பாத்மோத்தர கண்டம் முதலத்தியாயத்தில்—வேதத்தில் கூறிய தருமானுஷ்டானம் நிறைந்தவனும் விஷ்ணு பக்தனும் பொறாமையற்றவனும் மந்திரமறிந்தவனும் மந்திரத்தில் பக்தியுடையவனும் எப்போதும் மந்திரத்தையே ஆதாரமாகக் கொண்டவனும் பரிசுத்தமானவனும் நல்ல குருவின் உபதேச பரம்பரையைச் சேர்ந்தவனும் வேதாந்த சாஸ்திரத்தில் வல்லவனும் பகவதனுபவ கைங்கரியங்களையே புருஷார்த்தமாகக் கொண்டவனும் அதற்குப் பகவானையே உபாயமாகக் கொண்டவனும் பிரம்மத்தை நன்கறிந்தவனும் பிறவற்றில் ஆசையற்றவனும் கோபம் உலோபம் (பற்றுள்ளம்) இவையில்லாதவனும் நன்னடத்தையைக் கற்பிப்பவனும் மோக்ஷமடைய விருப்பமுள்ளவனும் பரமாத்மாவைப் பற்றிய விசாரம் செய்பவனுமாகி இத்தகைய நற்பண்புகளோடு கூடியவன் ஆசாரியனென்று சாஸ்திரத்தில் கூறப்படுகிறான். யாவனொருவன் பிறரை நன்னடத்தையில் இருக்கும்படித் திருத்துகின்றானோ அவன் ஆசாரியனென்று சொல்லப்பட்டிருக்கிறான்—என்று ஆசார்ய லக்ஷணம் கூறப்படுகின்றதன்றோ

ஹாரீத விசிஷ்ட பரமதர்ம சாஸ்திரத்திலும் இரண்டாமத்தியாயத்தில்—குற்றமற்றவனும் ப்ராஹ்மணனும் விஷ்ணு பக்தனும் கலப்பற்ற ஸத்துவ குணமுடையவனும் புதிது புதிதான யாகம் பூஜை தானம் ஆகிய கருமங்களைச் செய்பவனும் நல்ல ஆசார்யனுடைய உபதேச பரம்பரையைச் சேர்ந்தவனும் துவய மந்திரத்தின் பொருளை நன்கறிந்தவனும் அறிவும் ஆசையின்மையும் நிறைந்தவனும் வேதங்களிலும் அவற்றின் அங்கங்களான சிக்ஷை வியாகரணம் முதலியவற்றிலும் கரைகண்டவனும் நல்ல ஆசாரத்தில் இருக்குமாறு பிறரை நியமிப்பவனும் தருமம் அனைத்தும் அறிந்தவர்களில் உயர்ந்தவனும் பரமபாகவதனும் தன்னையும் பிறரையும் பாவச் செயல்களில் புகாமல் காப்பவனும் நல்ல ஆசாரங்களை அனுஷ்டிப்பவனுமாகிய ஆசார்யனை முதலில் பற்ற வேண்டும். விஷ்ணு பக்தனாய் எல்லா சாஸ்திரங்களையும் புராணங்களையும் கண்டறிந்து அவற்றில் கூறிய தருமங்களை யாவனொருவன் ஆசரிக்கின்றானோ அவனே ஆசார்யனென்று கூறப்பட்டுள்ளான்—என்று சொல்லப்பட்டுள்ளது.

இங்ஙனமே — சாஸ்திரங்களின் பொருளான தருமங்களை எவன் அறிந்து தானும் அனுஷ்டித்துப் பிறரையும் அவற்றில் நிலைத்திருக்கச் செய்கின்றானோ அவனே ஆசார்யனாகக் கூறப்படுகிறான்—என்றிது முதலிய வேறு வசனங்களும் காணத்தக்கன.

## யாதவ மன்னனுக்கு இட்ட இறுதிக் கட்டளை :

இவ்வாறு சாஸ்திரங்களில் கூறப்பட்ட லக்ஷணங்களையுடைய ஆசார்ய புருஷர்கள் ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் அவ்வத் திவ்ய தேச தருமங்களைப் பரிபாலிப்பதற்காக அவசியம் வம்ச பரம்பரையாக ஸ்தாபிக்கப்பட வேண்டும். இப்படிப்பட்ட ஆசார்ய புருஷர்கள் இல்லாவிட்டால் திவ்ய தேச தருமானுஷ்டான வரம்புகள் அழிந்தே போய்விடும். ஆகையால் இத்தகைய லக்ஷணம் நிறைந்தவர்களில் முதல்வரான இவ்வனந்தாழ்வானை முன்னிட்டுக் கொண்டே அந்தந்த தருமகாரியங்கள் இங்குச் செய்விக்கப்பட வேண்டும்.

பகவானுடைய பரிஜந பரிசாரகர்கள் திறத்தில் அவ்வக் கைங்கரியத்திற்குத் தக்க தகுதி தகுதியின்மைகளுக்குக் காரணமான நல்லொழுக்க தீயொழுக்கங்களை ஆராய்ந்து இவ்வனந்தாழ்வான் எப்போதாவது ஒருவரைச் சேர்த்துக்கொள்ளவேணுமென்றாவது ஒருவரை நீக்கிவிடவேணுமென்றாவது தெரிவிப்பராகில் அதில் ஸந்தேஹங்கொள்ளாமல் அப்படியே நீ செய்ய வேண்டும்.

இப்படிப்பட்ட ஆசார்யஸ்தானத்தை நிர்வஹிக்கும் புருஷர்கள் அவ்வத் திவ்ய தேசத்தின் ரக்ஷணத்தையும் ஸ்ரீவைஷ்ணவ தருமங்களின் வளர்ச்சியையுமே குறிக்கோளாகக் கொண்டுள்ளவர்கள் இனிமேல் வருங் காலத்திலும் ஒருகால் வந்து இங்கு வாஸம் செய்ய விரும்பினார்களானால் அவர்களையும் நீ கௌரவித்து இத் திவ்ய தேச ரக்ஷகர்களாக இங்கு ஸ்தாபிக்க வேண்டும்.

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி —வித்வான், திருப்பதி.

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

இவர்கள் போன்ற ஆசார்ய புருஷர்கள் கிடைத்தற்கு அரியவர்களல்லவா. மிக மிகக் கௌரவிக்கத் தக்க இவ்வாசார்ய புருஷர்களை, பெருமாள் திருக்கோவிலில் நடக்கும் கோஷ்டியில் கௌரவிக்கும் தருணங்களில், கோவிலை ஆதாரமாகக் கொண்டு ஜீவிக்கும் பரிஜன பரிசாரகர்களைக் கௌரவிப்பதற்கு முன்பாகவே கௌரவிக்க வேண்டும். அப்போதும் இத்தகையோர் பலர் சேர்ந்துவிட்டால் அவரவர் தகுதிகட்கு ஏற்றவாறு முறைப்படி கௌரவிக்க வேண்டும்.

சாண்டில்ய விசிஷ்ட தரும சாத்திரம் நான்காமத்தியாயத்தில் — அங்குச் சேர்ந்த பகவத் பக்தர்களில் பெரியவர்களை முதலில் முறைப்படியே மிக்க பக்தியுடன் சுத்தமான அர்க்யம் முதலியவற்றாலும் தனத்தாலும் பூஜிக்க வேண்டும் என்றும், என்னைப் பற்றிய பக்தியும் ஞானமும் செயல்களும் யார் யாருக்கு அதிகமாக உள்ளனவோ அவரவர்களை அந்தந்த முறைக்குச் சேர்ந்தவாறு வரிசையாக முதலில் கௌரவிக்க வேண்டும் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

ஆகையால் இங்கு இப்போது ஆசார்ய ஸ்தானத்தை நிர்வஹித்துக் கொண்டு வாழ்ந்து வரும் அனந்தாழ்வானுக்கும், திருவேங்கடமுடையானுடைய ஸகல கைங்கரியப் பொறுப்பையும் ஏற்பவராக இப்போது நியமிக்கப்பட்ட சடகோப ஜீயருக்கும், அவருக்கு உதவியாக ஏற்படுத்தப்பட்டு அவரோடொப்பக் கைங்கரியத்தில் ஊன்றியிருக்கும் இந்த ஏகாங்கிகளுக்கும் தக்கபடி அடைவிலே கௌரவம் செய்ய வேண்டும். பூஜிக்கத் தக்கவர்களைப் பூஜியாமல் விடுவதும் பூஜிக்கத் தகாதவர்களை முதலில் பூஜிப்பதும் பெருங்கேட்டை விளைக்குமென்பது மஹா பாரதம் ராஜ ஸூயயாக ஸபையின் ஸந்தர்ப்பத்தில் பீஷ்மர் கூறிய வசனம் முதலியவற்றாலும் விளக்கமாக அறியப்படுகின்றது.

ஆதலால் உயர்ந்த தகுதி பெற்றவர்களை முதலிலே கௌரவியாமலிருத்தல் தகுதியற்றவர்களை முதலிலே கௌரவித்தல் ஆகிய வரம்பு மீறிய செயல்களை, யான் எனது என்னும் செருக்குக் கொண்டு யாரும் ஒரு காலும் செய்யலாகாது என்று யாதவமன்னனுக்குக் கட்டளையிட்டு, அவன் மூலமாக அப்படியே ஒரு நியதியைச் செய்வித்தார். (பகவத் ராமானுஜ முனிவர் )

முற்கூறிய இவ்வாசார்ய புருஷர்களை வம்ச பாரம்பரியமாகத் திவ்ய தேச பரிபாலகர்களாக ஸ்தாபிக்க வேண்டும். ஜீயருக்கு உதவியான ஏகாங்கிகளும், மேன்மேலும் இப்படியே நால்வராகவேயோ ஒரு காலத்தில் ஸ்தான விசேஷங்கள் காரணமாகப் பெருமை அதிகமாகி அதனால் காரியங்களும் அதிகமாக ஏற்படுமானால் இதைவிட அதிகமான எண்ணிக்கை யுடையவர்களாகவோ அவ்வக் காலத்திய கார்ய நிர்வாஹுகளால் ஸ்தாபிக்கப்பட வேண்டும்.

இங்ஙனம் ஸ்தாபிக்கப்பட்ட இவர்களில் யாவரொருவர் கலியுகத்தின் தோஷம் காரணமாகவோ தாம் முன் செய்த கொடுவினையின் வலிமை காரணமாகவோ எப்போதாவது வரம்புமீறி நடந்துகொள்ளுகிறார்கள்—அவர்களை, தக்க இடம் காலம் நடத்தை இவற்றை அறிந்தவர்கள் தருமமறிந்தவரில் தலைவர்கள் பிரம்ம ஞானிகளில் முதல்வர்கள் ஆகிய அனைவரும் கூடிப் பெருமாள் கைங்கரியத்திற்குக் கேடு வரும்படியை நன்கு ஆராய்ந்து சிறிதும் ஸந்தேஹப்படாமல் அவ்வதிகார ஸ்தானத்திலிருந்து நீக்கி விடவேண்டுமென்று பகவத்ராமானுஜர் யாதவ ராஜனைக் கொண்டு வரம்பிட்டு வைத்தார். திருவேங்கடமலையில் திருமலை நம்பிகளின் சிஷ்யனொருவன் முன்பு செய்த தருமவரம்பை மீறி நடந்ததையும் ஸ்ரீரங்கத்தில் பெருமாளுடைய சொத்தைத் திருடுவதில் ஆசை கொண்ட ஒருவன் தமக்கும் விஷமிட்டதையும் 'பொருளின்கண் நசையினால் மனிதர்கள் எல்லாப் பாபங்களையும் செய்யக் காண்பதையும் முற்பட்டவர்கள் பிற்பட்டவர்கள் என்னும் வாசியில்லாமல் பெரியோர்களுக்கும்கூட ஆசை காரணமாகத் தகாத செயல்களில் மூளுதல்



அர்த்தநாரீஸ்வரர் கோவில் - திருச்செங்கோடு
திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி - கோவை.

காண்பதையும் உதாரணமாகக் காட்டி சில சமயம் தருமவரம்பை மீறி நடத்தல் எல்லோர்க்கும் ஏற்படலாமென்று கூறியே இவ்வரம்பை அவர் ஏற்படுத்தினர்.

இங்ஙனம் வரம்பேற்படுத்திய பின்பு பகவத் ராமானுஜ முனிவர் ஸ்ரீனிவாஸ பகவானுடைய அனுமதியைப் பெற்று ஸ்ரீரங்கம் செல்ல விருப்பமுடையவராய் யாதவராஜனை அழைத்து 'இப்போது இங்கு இருப்பவர்களில் இவ்வனந்தாழ்வான் ஒருவரே எல்லாவிதத்திலும் மிக மேம்பாடுடைய ஆசாரியராவர். ஆகையால் அவரது கட்டளையின்படி எல்லாவற்றையும் பரிபாலிக்கக் கடவாய்' என்று உத்தரவு செய்து, அனந்தாழ்வானை அழைத்து "வாரீர் அனந்தாழ்வானே நீர் ஒருவரே இங்கு இப்போது தலைநரைத்த கிழவராயிருக்கிறீர். உம்மைச் சேர்ந்த சடகோப ஜீயர் முதலியவரையும் அவ்வக் கைங்கரியங்களில் முறைப்படி ஏவிக் காக்கக் கடவீர். உமது ஸ்தானத்தில் உம்மைச் சேர்ந்தவர்கள் போலவும் எனது ஸ்தானத்தில் சடகோப ஜீயர் முதலியவர்கள் போலவும் திருமலை நம்பிகளின் ஸ்தானத்திலும் சிலரை ஸ்ரீநிவாஸனுக்குத் தொண்டு செய்பவர்களாக ஸ்தாபிக்க வேண்டும். அப்படிப்பட்ட சிலர் இங்கு இப்போது இல்லையென்பதே எனக்குக் குறையாகத் தோன்றுகிறது. அதையும் ஒரு சமயம் நீர் பூர்த்தி செய்யக் கடவீர்.

சடமர்ஷண குலத்தில் அவதரித்த பூஜ்யரான ஸ்ரீமந்நாதமுனிகள் பகவத் பக்தர்களில் முதல்வராகி, அப்போது சிறிது அதிகமான கிளைகளைக் கொண்டதும் சடமர்ஷண கோத்திரத்தில் உண்டானதுமான அக்காலத்திய வம்சஸமூஹம் அனைத்தையும் தம்முடைய வம்சமாகவே எண்ணிக் கௌரவித்து 'எவன் பிறந்தது முதலாக இறக்கும் வரையில் வாஸுதேவனைத் (திருமாலைத்) தெய்வமாகக் கொள்ளமாட்டானோ அப்படிப்பட்டவன் நம் குலத்தில் பிறவாதொழிக. பிறந்துவிட்டாலும் விரைவில் இறந்துவிடுக' என்று ஸங்கல்பம் செய்து கொண்டமை பிரசித்தம்.

ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றிய குருகைகாவலப்பனென்னும் ஆசாரியர் வீரநாராயணபுரத்தில் யோகம் செய்துகொண்டிருக்க, எமது பரமாசார்யரான ஆளவந்தார் அவரிடமிருந்து யோக ரகசியத்தைத் தெரிந்துகொள்ள விரும்பிச் சென்று அவருடைய ஸமாதிக்குக் (அவருடைய மனம் பரமனிடத்தில் ஒன்றுபட்டிருக்கும் நிலைக்கு) கேடு விளையுமென்றஞ்சிச் சுவர்ப்புறத்தே மறைவாக இருக்க, அப்பன் ஸமாதி நிலையின்கண் தமது தோள்களை அமுக்கிச் சுவருக்கு வெளிப் புறத்திலுள்ள ஒருவரை பகவான் கண்டு கொண்டிருந்ததைக் கண்டு உடனே ஸமாதி நிலையைக் கலைத்துக் கொண்டு எழுந்து திருமுகத்தைத் திருப்பி 'சடமர்ஷண குலத்தில் உதித்தவர் யாரேனும் இங்கு வந்தார் உண்டோ' என்று கூற, பின்பு ஆளவந்தார் 'அடியேன் யாமுனன் இதோ விடை கொண்டுள்ளேன்' என்று கூறிக்கொண்டே வந்து அவருடைய திருவடிகளில் விழுந்து 'ஸ்வாமீ சுவர்மறைவாக இருந்த அடியேனைத் தேவரீர் அறிந்து கொண்டபடி எங்ஙனே' என்று விண்ணப்பிக்க, அப்பன் 'யோக நிலையில் என்னால் இஷ்டப்படி அனுபவிக்கப் படுகின்ற பகவான் பிராட்டி தனது திருமுலைத் தடத்தால் நெருக்கியணைத்தாலும் அவள்முகத்தையும் பாராதவன் இப்போது எனது தோள்களை அமுக்கி இரண்டு மூன்று தடவைகள் திருமுகத்தைத் தூக்கித் தூக்கிச் சுவரால் மறைப்புண்ட இடத்தைப் பார்த்தான். அதனால் சடமர்ஷண குலத்தில் தோன்றியவர் யாராவது இங்கு வந்திருக்க வேண்டுமென்று நினைத்தேன்' என்று பதிலளித்து ஸ்ரீமந்நாதமுனிகளின் ஸங்கல்பத்தை பகவானும் பயனுடையதாகச் செய்தானென்று கூறினர். ஆகையால் பகவானுக்கு மிகப் பிரியமானதும் ஸ்ரீமந் நாதமுனிகளின் அபிமானத்திற்கு இலக்கானதுமான அத்தகைய

## ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில், திருமலை

### வியாழக்கிழமைகளில்

காலை (சிறப்பு ஸேவைகள், திருப்பாவாடை, பூலங்கி ஸேவை)

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் (ரூ. 25/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 3-30 | ,, | 3-45 | | சுத்தி |
| 3-45 | ,, | 4-30 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு) |
| 4-30 | ,, | 4-45 | ,, | கொலுவு, பங்காரு வாயிலில் பஞ்சாங்க ஸ்ரவணம்) |
| 4-45 | ,, | 5-30 | ,, | முதல் அர்ச்சனை, ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு) |
| 5-30 | ,, | 6-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 6-00 | ,, | 8-00 | ,, | சாலிம்பு, 2-வது அர்ச்சனை, (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன. |
| 8-00 மாலை | ,, | 6-00 இரவு | மாலை | ஸர்வ தரிசனம |
| 6-00 இரவு | ,, | 8-00 | ,, | பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி, சமர்ப்பணை, இரவு மணி முதலியன. |
| 8-00 | ,, | 10-00 | ,, | பூலங்கி ஸர்வ தரிசனம |
| 10-00 | ,, | 10-30 | ,, | சுத்தி |
| 10-30 | | | | ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- நபர்ஒருவர்க்கு) (ஸர்வ தரிசனம் முடிவதைப் பொறுத்து) |

சடமர்ஷண கோத்திரத்தில் பிறந்த ஒருவரை இங்குத் தக்க சமயத்தில் ஸ்தாபிக்கக் கடவீர்' என்று நியமித்து, சடகோப ஜீயரை அழைத்து 'வாரீர் சடகோப ஜீயரே ஏகாங்கிகள் நால்வருடன் கூடி அனந்தாழ்வான் நியமனத்தைப் பின்சென்று திருவேங்கடமுடையானுடைய திவ்யைச்வர்யத்தையும், (மடத்தில்) ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனுருடைய திருவாராதனத்தையும் குறைவின்றி நிறைவுறச் செய்து வாரும்' என்று நியமனம் செய்துவிட்டுத் திருமலையிலிருந்து இறங்கியருளினர்.

அதன் பின்பு ஆண்டாளுடன் ஸ்ரீ கோவிந்தராஜனையும் ஸேவித்து, அவருடைய திவ்யைச்வர்யமும் குறைவின்றிப் பாதுகாக்கப்படுவதைக் கண்டு மிக மகிழ்ச்சியடைந்த பகவத் ராமானுஜ முனிவர் யாதவ மல்லனை அழைத்து "ஓ யாதவமன்ன ஸ்ரீ கோவிந்தராஜனும் திருவேங்கடமலை மஹாராஜனுமாகிய இருவரும் சைவ ஜனங்களால் நேர்ந்த பெரிய ஆபத்தென்னும் கடலில் வீழ்ந்து எப்படியோ கரை சேர்ந்தார்கள். இனி அத்தகைய உபத்திரவம் அவர்களுக்கு நேராதபடிக் காக்கக்கடவாய். சங்கு சக்கரப் பொறிகளை (தோளில்) ஒற்றிக் கொள்ளாதவர்களான வேறு தேவதைகளின் பக்தர்களுக்கு, ஒரு போதும் எவ்வளவு கஷ்டம் வந்தாலும் இத்திவ்யதேசத்தில் பெருமாளுடைய கைங்கரியங்களைக் கண்காணிக்கும் அதிகாரம் முதலியவற்றைக் கொடுத்தல் மூலமாகக் கூடப் புகுவதற்கு இடம் கொடாதே.



சரித்திரப் போர்களில் முகம்மதியர் படை எடுப்பால் சிலைகளுக்கு பாதிப்பு ஏற்பட்ட நிலையில் உள்ள மகிஷாசுரமர்த்தினி–(சாமுண்டியின் சிலை).

திரு. எஸ். ஜி. சேஷகிரி—கோவை.

இப்போது இத்திவ்ய தேசத்தை விட்டுச் செல்கின்ற நான் அதிகப் பிரீதி காரணமாக, பெருங்கேடு விளையுமென்றஞ்சி உனக்கு நான் செய்யும் இவ்வுத்தரவை, முன்பொருகால் பகைவரை அழிப்பதற்காகத் துவாரகையை விட்டுச் செல்லும் க்ருஷ்ண பகவான் 'நான் வரும்வரையில் சக்கரப் பொறி யொற்றிக் கொண்டவரை உள்ளே புகுரவிடுங்கள், நான் திரும்பும் வரையில் சக்கரப் பொறியொற்றிக் கொள்ளாதவர்களை உள்ளே புகுரவிடாதீர்கள்' என்று துவாரகா பட்டணத்து வாயிற் காவலாளர்களுக்கு இட்ட உத்தரவைப் போல் நினைத்து ஊக்கமாக இருக்கக் கடவாய்" என்று கட்டளை செய்து கருணை பொங்கிய தமது குளிர்ந்த கடைக் கண்ணோட்டத்தினால் அவனை அனுக்ரஹித்துப் பரிபூரண மங்களாசாஸனம் செய்து அவனைக் கொண்டாடிவிட்டு அவ்விராமானுச முனிவர் தமது பிரிவைப் பொறாத அனந்தாழ்வான் சடகோபஜீயர் யாதவராஜன் முதலியோர் கண்ணுங் கண்ணீருமாக வெகு தூரம் வரையில் பின் தொடர்ந்து வர, தாமும் நீர்மல்கு கண்ணினராய் மிகச் சிரமப்பட்டு அவர்களது இசைவைப் பெற்று ஸ்ரீரங்கதிவ்ய நகரத்துக்கே எழுந்தருளினர்.

(தொடரும்)

# வரலட்சுமி விரதம்

★ நஜன்

வந்தே பத்மகாரம் ப்ரஸந்த வதநாம
ஸெளபாக்யநாம் பாக்யதாம்.
ஹஸ்தாப்யாம் அபயப்பிரதாம்
மணிகணை நாநாவிதேர் பூஷிதாம்

ஆவணி மாதத்தில் பெண்மணிகள் அனுஷ்டிக்கும் முக்கியமான பண்டிகை வரலட்சுமி விரதம். மணமான பெண் தலைநோன்பு ''நோற்பது''விசேஷ வைபவமாகும். கலசத்தில் வரலட்சுமியை ஆவாஹனம் செய்து வீட்டின் நடையிலிருந்து அழைத்து வந்து அமர்த்திக் கணவனின் நலனைக் கருதிச்செய்யும் பூஜை. மாங்கல்யம் 'கெட்டியாக' இருக்கவும், வீட்டில் எப்போதும் சுபிட்சம் நிலவவும் லட்சுமியின் அருள் அவசியமல்லவா? இந்த நோன்பு மணமான பெண்களுக்கே உரித்தானது. இல்வாழ்க்கையின் நலனை உத்தேசித்துச் செய்யப்படும் இப்பூஜையை 'எங்கள் வீட்டில் பழக்கமில்லை'' என்று சிலர் ஒதுக்கி விடுகிறார்கள். இது தவறு. புனர் பூஜை செய்த பின் மாலை ஆரத்தி எடுத்த பின்பு அக்கலசத்தை அரிசிப் பானையில் வைப்பதன் அர்த்தம், எப்போதும் வீட்டில் அன்ன லக்ஷ்மியின் அனுக்கிரகம் இருக்க வேண்டும் என்பதுதான்.

அன்பு (ப்ரீதி), கீர்த்தி (புகழ்), சாந்தி (அமைதி), இன்பம் (சுகம்), வலிமை (புஷ்டி) ஆகிய சக்திகளும் வரலட்சுமியின் அம்சங்கள்.

சிவனுக்கு வில்வமும், விஷ்ணுவுக்குத் துளசியும் மிகவும் பிடித்தம். அதுபோல மகாலட்சுமிக்கு அருகம் புல் மீது அபாரப் பிரியமாம். இதை அல்ப புல் என்று எண்ணாமல் லக்ஷ்மி தேவி அங்கீகரித்துள்ளது, அப்புல்லின் பெருமையை உணர்த்துகிறது. இப்புல்லின் வேரைக் கஷாயம்போட்டுப் பருகினால் அது மிகவும் நல்லது என்றும், சூட்டைத் தணிக்கும் என்றும் வைத்ய நிபுணர்கள் கூறுகின்றனர்.

மனிதனுக்கு ஆக்கம், அன்பு, செல்வம், இன்ப இல்வாழ்க்கை(சௌபாக்கியம்) இவை திருமகளான ஸ்ரீமகாலட்சுமியின் இன்னருளால் ஏற்படும் என்பார்கள். இவை எட்டு வடிவத்தில் காட்சி தந்து அஷ்ட ஐச்வரியத்தையும் தருகிறாள். தனலக்ஷ்மி, தானியலக்ஷ்மி, கஜலக்ஷ்மி, ஜயலக்ஷ்மி வீரலக்ஷ்மி, சந்தானலக்ஷ்மி, கஜலக்ஷ்மி வித்தியாலக்ஷ்மி என்பன இவளின் எட்டுநிலைகளாகும். ஒவ்வொரு பெயருக்குத் தக்கபடி தனித்தனி வடிவம் தாங்கி இருக்கிறாள். ருக்வேதம் முதல் எல்லா வேதங்களும், பாகவதம், பாரதம், ஸநத்குமார ஸம்ஹிதை, மந்திர கல்பம், ஸாரஸ்வத ஸித்தி, ஸெளபாக்கிய ஜீவனம், ஸ்காந்தம், தேவி பாகவதம்,ஸ்ரீரத்ன கோசம், மந்திர மகோததி முதலிய நூல்களில் இவள் பெருமை பரக்கப் புகழப்படுகிறது.

''ஞானைஸ்வர்ய ஸுகாரோக்ய தன தான்ய ஜயாதிகம் லக்ஷ்ம்யஸ்யா ஸமுத்திஷ்டம் ஸாலக்ஷ்மீதி நிகத்யதே'' என்று நிருக்தம் என்னும் நூல் கருத்துப்படி இவள் அறிவு, செல்வம், இன்பம், நோயற்ற வாழ்வு பொருள், தான்யம், வெற்றி இவைகளின் அடையாளமாக இருப்பதால் இவளை லக்ஷ்மி என்கிறோம். லக்ஷ்மி என்றால் அடையாளம் எனப் பொருள்.

மணமான பெண்கள் மட்டுமின்றிக் கன்னிப் பெண்களும் பின்பு ஏற்படவேண்டிய ''ஸெளபாக்கியம்'' (மனமொத்த குடும்ப வாழ்க்கை) என்ற பெரும் பலனுக்காக இந்த நோன்பில் கலந்து கொள்வார்கள். ஆடவர்களும் இந்த நோன்பினை நோற்று நோயற்ற வாழ்க்கையைப் பெறலாம் என்பார்கள். சித்திரநேமி என்பவன் இந்த நோன்பை நோற்றுப் பெருநோய் நீங்கப் பெற்றான் என்றும், சாருமதி என்ற பெண்ணும், மற்றும் நந்தன், விக்ரமாதித்தன், முதலானோர்களும் இந்த நோன்பை நோற்றுப் பல நன்மைகளை அடைந்தார்கள் என்றும் பவிஷ்யோத்தர புராணம் கூறுகிறது.

## நோன்பு முறை

ஒவ்வொரு ஆண்டும் சிராவண (ஆவணி)மாதம் சுக்கிலபக்ஷம் பௌர்ணமிக்கு நெருங்கிய வெள்ளிக்கிழமை அன்று இந்த நோன்பை நோற்பது வழக்கம். கோதூளி வேளை என்ற மாலை வேளையில் இந்த நோன்பைக் கொண்டாட வேண்டும். சுத்தமான இடத்திலும் நல்ல வாசனை வீசும் இடத்திலும் லக்ஷ்மி வந்து தங்குவாளானபடியால், இந்த நாட்களில் வீட்டை நன்றாகச் சுத்தம் செய்து, அழகிய மண்டபம் அமைத்து எலுமிச்சம்பழமும் பொற்காசுகளும் இடப்பட்ட அக்ஷதை(முனை முறியாத பச்சரிசி) நிறைந்த கும்பம் வைத்து கும்பத்திற்குப் பால் வண்ணச்சேலை உடுத்திக் கும்பத்தின் வயிற்றில் அம்பாள் திருமுருக மண்டலத்தை அமைத்து, செந்தாமரைப் பூவைக் கைகளில் ஏந்தி, செந்தாமரைப் பூவில் அமர்ந்து சிரித்த முகத்துடன் கூடியவளாய், மனத்தாமரையில் இருத்தித் தியானிக்க வேண்டுமென்பார்கள். ஸ்ரீமந் நாராயணனுடன் அமர்ந்திருக்கும் உலகத்தாயை ஸ்ரீ சூக்தத்தாலும் ஸ்ரீலக்ஷ்மி காயத்திரியாலும் பெரியோர்கள் முன்னிலையில் தியானம் செய்யவேண்டும் என்று

சொல்வார்கள். தியானம் செய்த பின்பு மங்களகரமான மஞ்சள் நூலை யும் (சரடு) உடன் வைத்துப் பூஜிக்க வேண்டும். அதற்குப் பிறகு அந் நூலை எடுத்து தம் வலது கை மணிக் கட்டில் அணிந்துகொள்ள வேண்டும். கடைசியில் ஸ்ரீதேவிக்குப் பாத்யம், அர்க்கியம் முதலிய பதினறு வகை உபசாரணைகளையும் செய்ய வேண்டும். இனிப்புக் கொழுக்கட்டை போன்ற நைவேத்தியம் செய்து உற்ருர் உற வினர்களுடன் அமர்ந்து ஸ்ரீதேவியை மனமார வாழ்த்திக்கொண்டு உண்ண வேண்டும். அன்று முழுவதும் வீண் பேச்சு, வம்புப் பேச்சில்லாமல் நோன்பு முறைப்படி நடந்துகொள்ள வேண்டும்.

## திருமகளின் பெருமை

ஸ்ரீ மகாலக்ஷ்மியை ஆக்கத்திற்கும் அருளுக்கும் தெய்வமாக ருக்வேதம் எடுத்துரைக்கிறது. அதர்வண வேதத்தில் நலம் தரும் தெய்வம், தீங்கிழைக்கும் தெய்வம் ஸ்ரீ மகா லக்ஷ்மி என்பது குறிப்பாக உணர்த் தப்பட்டுள்ளது. யஜுர் வேத உப நிஷதமான தைத்திரியத்தில் சூரிய மண்டலத்தின் நடுவே ஸ்ரீமகாலக்ஷ்மி அமர்ந்தவள் என்றும், சூரியனுடைய தொடர்புள்ளவள் என்றும், வருணிக்கப்பட்டுள்ளது. அதிகம் ஏன்? ''வேரிமாருத பூமேல் இருப் பாள் வினை தீர்க்குமே'' என்ற ஆழ் வார் கருத்துப்படி இவள் தொடர் பினுல்தான் திருமாலுக்கு ஏற்றமும் புகழும் ஏற்படுகின்றன என்பதும் பூர்வாசாரியார்களின் எண்ணமாகும். இவள் ''அமுதவாகினி'' என்ற குளத் தின் நடுவில் செந்தாமரையில் தாம ரைப் பூவும் கையுமாக அமர்ந்திருப் பாள் என்றும் பழைய நூல்களின் கருத்தாகும். இவளை ''ஹரிணி'' என்றபடி, பச்சைநிறம் கொண் டவளாக ஸ்ரீவித்யாரண்ய ஸ்ரீபாஷ்யம் கூறுகிறது. வீட்டில் என்றும் அமர்ந் திருக்கும் இவளை ''கிருஹலக்ஷ்மி'' என்று சிந்தாமணி என்னும் நூல் விளக்கம் தருகிறது. ஸ்ரீ விஷ்ணு புராணத்தில், இந்திரனல் துதிக்கப் பட்ட 17 செய்யுள் கொண்ட இவள் துதியைத்தினமும் படிப்பவர்களுக்கு நிச்சயமாய் சகல நலங்களும் ஏற்படு வதைக் காணலாம்.

இவள் தங்கி இருக்கும் இடங்களை இவளே கண்ணனிடம் கூறியதாகப் புராண நூல்கள் கூறுகின்றன. அவை யாவன : ''பசுவின் பின்புறம், யானை யின் முகம், வெள்ளை வாசனையுள்ள மலர், விளக்கு, சந்தனம், தாம்பூ லம், கோமியம், கன்னிப் பெண்கள், அதிகம்பேசாதவர்கள், வேதமோதிய உத்தமர்கள், உள்ளங்கை; குதிரை, டமாரம், பசு மாட்டின் கால் தூசி, வேள்விப் புகை முதலியன.

இவள் தங்காமல் விலகிச் செல் லும் இடங்களாவன : ஆட்டின் கால் தூசி, கழுதையின் கால் தூசி இவை படும் இடங்கள், அழுக்கான ஆடை உடுத்தியவர்கள், பற்களில் அழுக் குள்ளவர்கள், அதிகமாக உண்பவர் கள், கடுஞ்சொல் சொல்பவர்கள், சூரிய அஸ்தமனத்திலும், உதயத் திலும் தூங்குகிறவர்கள், தரையைக் கீளறுகிறவர்கள், துரும்பைக் கிள்ளு பவர்கள் இடத்தில் இருக்க மாட் டாள். இந்த தீய பழக்கம் உள்ள வன் திருமாலாக இருந்தாலும் லக்ஷ்மி தங்கமாட்டாள் என்றும் பழைய நூல்களில் உரைக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீ தேவியின் தமக்கை மூதேவி என்றும் சொல்வதுண்டு. பாற்கடலை கடையும் போது முதலில் தோன்றி யவள் மூதேவி தாளும். ஒரு காலத் தில் அவள் அருள் கடாக்ஷம் தங்கள் மேல் விழாமல் இருக்க அவளையும் மக்கள் பூஜித்து வந்திருக்கிருர்கள்.

ஃ ஃ ஃ

பெண்மணிகள் அனுஷ்டிக்கும் மற் ெருரு முக்யமான நோன்பு மாசி முடிந்து பங்குனி ஆரம்பமாகும்போது வரும் ''கார் அடை'' நோன்பாகும். இந்த நோன்பும் கணவனின் நன்மை யைக் குறித்தே செய்யப்படுவதாகும். சாவித்திரி யமனிடமிருந்து தன் கண வன் உயிரை மீட்டுவந்தது இத்தினத் தில்தான். இந்நோன்பில் செய்யப் படும் கொழுக்கட்டை (உப்பு) சிவ அம்சத்தையும், கார் அடை (தித் திப்பு) சக்தி அம்சத்தையும் குறிக் கிறது. கணவனுக்கு அடையையும் மனைவிக்குக் கொழுக்கட்டையையும் உண்ணக் கொடுப்பதின் தாத்பர்யம் இல்லற வாழ்க்கையில் இருவரும் என்றும் இணைந்திருக்கவேண்டும் என் பதைச் சூசகமாகக் குறிப்பிடுவது தான்.

''உருகாத வெண்ணெயும் ஓரடை யும் நான் வைத்து, ஒரு நாளும் என் கணவனைப் பிரியாமல் இருக்க வேணும்.''

என்று நோன்பன்று இந்தியா விலுள்ள பல பாகங்களிலும் பெண் கள் இந்தப்பிரார்த்தனையைச் சொல் லிச் சரடு கட்டிக்கொள்கிருர்கள்.

இந்த நோன்பு பற்றிய மற்ெருரு வரலாறும் இருக்கிறது. காஞ்சீபுரத் தில் கம்மாளத் தெரு என்ற வீதியில் கங்கணேசுவரர் என்ற சிவலிங்கம் கோயில் கொண்டிருக்கிருர். இங்கே அம்பாள் ஒரு மணல் லிங்கத்தை வைத்துப் பூஜை செய்தாளாம். அதி லிருந்து ஈசுவரன் வெளிவந்து அம் பாளைக் கல்யாணம் செய்து கொண் டாராம்.

ஈசுவரனைப் பிரிந்திருக்கும் போது அம்பாள் மாயை ஆகிவிடுகிருள்; அதாவது, அவளையே மாயை மூடி விடுகிறது. ஒரு சமயம் அம்பாளை

---

## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத் திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப் படும். ஒரு வருடத்திற்கும் குறை வான கால அளவுக்காக அனுப்பப் படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

---

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ.6-50
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்)
6-15 ,, 6-45 ,, —சுத்தி—முதல்மணி
6-45 ,, 1-00 மதியம்—ஸர்வதரிசனம்
1-00 ,, 1-30 ,, —சுத்தி, 2-வது மணி
1-30 ,, 7-00 இரவு —ஸர்வதரிசனம்
7-00 ,, 7-30 ,, —சுத்தி, இரவு மணி
7-30 ,, 8-30 ,, —ஸர்வதரிசனம்
8-30 ,, 9-00 ,, —ஏகாந்தசேவை

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

4-00 ,, 4-30 ,, —ஸர்வ தரிசனம்
4-30 ,, 5-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50
(நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்)
5-00 ,, 5-15 ,, —நித்ய அர்ச்சனை
5-15 ,, 5-45 ,, —சுத்தி, முதல் மணி
5-45 ,, 7-00 ,, —ஸர்வதரிசனம்
7-00 ,, 7-30 ,, —சாலிம்பு
7-30 ,, 9-00 ,, —தாயாருக்கு அபிஷேகம்
(ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அலங்காரம், 2வது மணி
10-00 ,, 8-00 இரவு —ஸர்வ தரிசனம்
7-00 ,, 8-00 ,, —கண்ணாடி மண்டபத்தில் ஊஞ்சல் சேவை. (ரூ. 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்)
8-00 ,, 8-30 ,, —இரவு மணி
8-30 ,, 9-00 ,, —ஏகாந்தசேவை

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

II ஆர்ஜிதம்

| | | |
|---|---|---|
| (அ) பொங்கல் | ½ அளவு | ரூ. 55/- |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 50/- |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 40/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 85/- |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- |
| (ஊ) தோசைப்படி | ,, | ரூ. 35/- |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 90/- |
| (ஏ) ஸீரா | ,, | ரூ.155/- |

III சேவைகள்

| | |
|---|---|
| (அ) நித்ய அர்ச்சனை (ஆண்டொன்றுக்கு) | ரூ. 150/- |
| (ஆ) ஸகஸ்ரநாமஅர்ச்சனை | ரூ. 6-50 |
| (இ) அர்ச்சனை | ரூ. 1-00 |
| (ஈ) ஹாரத்தி | ரூ. 0-50 |
| (உ) பூராபிஷேகம் (வெள்ளிக்கிழமையில் மட்டும்) | ரூ.100-00 |
| (ஊ) ஊஞ்சல் சேவை (வெள்ளிக்கிழமை மாலையில் மட்டும்) | ரூ.150-00 |
| (எ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஏ) யானை வாகனம் | ரூ. 32-00 |

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

இப்படி மாயை மூட, அவள் அஞ்ஞானத்துக்குள்ளானாள். பூஜை செய்தாள். நிவேதனத்துக்கு என்ன செய்வதென்று யோசித்தாள். அப்போது வஸந்த ருது. நிறைய துவரை கிடைத்தது. அரிசி மாவு, வெல்லம், துவரை எல்லாவற்றையும் போட்டுக் கிளறி அடையாகத் தட்டினாள். வைக்கோல் மேல் அதை வைத்து ஆவியில் வேகவிட்டு எடுத்தாள். பூஜை செய்து இந்த அடையையும் வெண்ணெயையும் வைத்து நிவேதனம் செய்தாள். சரட்டைக் கங்கணமாகத் தரித்துக்கொண்டாள். சாஸ்திர ரீதியாகக் கையில்தான் சரடு கட்டிக் கொள்ள வேண்டும். ஆனால் பழக்கம் வேறுபட்டுக் கழுத்தில் கட்டிக்கொள்வதாக மாறிவிட்டது.

இந்த விரதத்தை அம்பாள் அநுஷ்டித்தது மாசியும் பங்குனியும் கூடும் சமயத்தில். எனவேதான், நாமும் அதே சமயத்தில் இந்த நோன்பை அனுஷ்டித்து, தீர்க்க சுமங்கலியாக வாழவேண்டும் என்று வருஷந்தோறும் பராசக்தியைப் பிரார்த்திக்கிறோம்.

ஃ ஃ ஃ

கௌரீ பூஜை: விவாக காலத்தில் அம்பாளை அவசியம் ஆராதிக்க வேண்டும். ருக்மணி கிருஷ்ண பகவான் கணவனாக வரவேண்டும் என்று அம்பிகையை ஆராதித்தாள். கௌரீ பூஜை செய்து அப்பாக்கியத்தை அடைந்தாள்.

இந்த கௌரீ பூஜையை ஏன் செய்ய வேண்டும்? பெண்கள் விவாகமான பின்பு பாதிவ்ருத்யத்துடன் இருக்க வேண்டும். அதற்குத் திடசித்தம் வேண்டும். அம்பிகைக்குப் பாதிவ்ருத்யம் இருப்பதற்கு அடையாளம் இருக்கிறது. தாட்சாயணியாக அவதரித்த போது பதி தூஷணம் செய்தவனின் மகளாக வந்த உடல் கூடாது என்று உயிர் நீத்தாள். கணவனை தூஷிப்பதைக் கேட்ட சரீரமே இருக்கக் கூடாது என்பவளை, மணமாகும் பெண் பூஜித்து அவள் அருள் பெறுவது நல்லதல்லவா? ★

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசாரியா

அம்மா நீ மனிதன் பகலிலும் இரவிலும் செய்த பாபங்களை அழித்து விடுகிறாய். ஏ! காயத்ரீ தேவியே நீ மனிதனுக்கு "ஓஜ:" என்கிற ரேதஸாக இருக்கிறாய். சத்துருக்களை அடக்கும் சக்தி வடிவாக இருக்கிறாய். பர்க்கஸ் என்பதற்கு இந்த்ரியம் எனவும் பொருள். எல்லாவிதமான பலத்தையும் தருகிறாய் என இந்த காயத்ரியின் கருத்தாவது:- சூரியனுடைய தேஜஸானது நடுவில் "பர்க்க" என்ற பெயருடன் தேங்கி இருக்கிறது. இந்தப் பர்க்கஸ் என்பதே அபார சக்தி வாய்ந்த ஒளி. இதன் பெருமையைச் சுருக்கமாகக் கூறினால் உலகம், உலகமக்கள், உடல் அனைத்துக்கும் இந்த ஒளியே ஜீவாதாரம் எனலாம். "இந்த பர்க்கஸ் என்ற ஒளியானது எனது புத்தியைத் தூய்மைப்படுத்தி நற்செயல்களைச் செய்ய ஆற்றல் உள்ளவைகளாகக் காக்கவேண்டும். அத்தகைய சூரியனுடைய எல்லையற்ற ஆற்றல் சக்தியான பர்க்கஸ்ஸை நான் உபாஸிக்கின்றேன்" என இந்த காயத்ரீ மந்திரம் சுரம் உச்சாரண பேதத்தால் இரு வகைப்படும். குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட காயத்ரியை உச்சரித்தால்தான் பயன் நிறைவு ஏற்படும். இந்த காயத்திரீ ஜபத்தைத்தான் முக்காலத்து சந்தியாவந்தனத்தின் மையப் பகுதி என்பர். இவ்வாறு சந்தியாவந்தனத்தையும் காயத்ரீ ஜபத்தையும் விடாது தினப்படி அந்தணர்கள் செய்வதானது நாட்டின் எல்லா நலத்துக்குத்தான். வேதத்தில் வரும் "ரக்ஷோக்னம்" என்ற மந்திரப் பகுதி காயத்ரீ மந்திரத்துடன் ஜலத்தில் சூர்யனுக்கு அர்க்யம் தந்தால் வானத்தின் மலம் (ஏர்பொல்யூஷன்) நீரின் மலம் (வாட்டர் பொல்யூஷன்) தரை மலம் (ஏர்த் பொல்யூஷன்) என்ற மும்மலங்களையும் "மந்தேஹாருணம்" என்ற தீவுக்குத் தள்ளி இம்மூன்றும் என்றும் தூய்மை அடையச் செய்கின்றன. காயத்ரீ நான்கு வேதங்களின் சாரம் என யமனும், பிரம்மசாரி தினப்படி காயத்ரீ ஜபம் செய்வதால் எல்லாம் பாபங்களும் தீபட்ட தூசு போலாகும் என சம்வர்த்தரும், வைதிகச்செயல்களை விட்டாலும விடலாம் காயத்ரீ ஜபத்தை எந்த அந்தணரும் விடக்கூடாது என விசுவாமித்திரரும், தான் ஏதாவது பாபம் செய்ததாக உணர்வு ஏற்பட்டால் காயத்ரீ மந்திரத்தை ஜபித்தால் அப்பாலம் தொலையும், ஜபம் செய்யாதவன் பயங்கர நரகத்தில் வீழ்வான் என வியாஸரும் கூறியுள்ளனர். சூரியனுடைய சக்தி அபாரமானது. அவனுக்கு ஆயிரம் கிரணங்களில் 400 கிரணங்கள் மழையையும் 30 கிரணங்கள் பனியையும் உண்டு பண்ணுகின்றன. மற்றவை மனிதனுக்கு எல்லாவிதமான ஆரோக்யத்தையும் உண்டு பண்ணுகின்றன. சூரியனைச் சுற்றி பிரபைகள் உள்ளன. அவை "ஹேதி" என்பது தொடங்கி "பாத" என்றது ஈராக மொத்த 20 பிரபைகள் உள்ளன. இந்த இருபதிலும் காயத்ரீ சக்தி பொழிகிறது. இந்த காயத்ரீ சூரியமண்டலத்தின் நடுவில் காலையில் ருக்வேதம் ஓதிக் கொண்டு, சிகப்பு நிறமுள்ளவளாய், சிறு பெண் வடிவத்தில், கையில் ருத்ராக்ஷ மாலையுடன் அன்ன வாகனத்தில் அமர்ந்து, பிரம்மாவின் வடிவாகக் காட்சி தருவாள். இந்த காயத்ரீ நடுப்பகலில் சூரிய மண்டலத்தின் நடுவே யஜுர்வேதம் ஓதிக்கொண்டு, வெள்ளை நிறத்துடன், கையில் சூலம் ஏந்திக்கொண்டு, எருதின் மேல் அமர்ந்து, சிவ வடிவத்தில், யௌவன மங்கையாகக் காட்சி தருகிறாள்.

காயத்ரீ மாலையில் சூரிய மண்டலத்தின் நடுவே கறுப்பு நிறத்துடன், சாமவேதத்தை ஓதிக்கொண்டு ஸரஸ்வதி வடிவில், கையில் சக்காரயுதம் ஏந்தி, முதிர்ச்சி அடைந்தவளாய், கருட வாகனத்தில் அமர்ந்து, விஷ்ணுவின் வடிவில் காட்சி தருவாள். இந்தக் காயத்ரீ மந்திரத்தை குருபதேசம் பெற்று, நம்பிக்கையுடன். முறைப்படி தினப்படி சூரியன் தென்படுவதற்கு முன்பும், மடுப்பகலில் சூரியன் நடுவானத்தில் இருக்கும் பொழுதும், மாலையில் சூரியன் மறைவதற்கு முன்பும், சந்தியாவந்தனத்துடன் 1008 108, 28 தடவைகளாவது ஜபித்து வந்தால் தான் விரும்பிய பலன் அனைத்தும் கிடைக்கும். புத்தகத்தில் காயத்ரீ மந்திரத்தைப் படித்தோ யாரோ கூறத் தற்செயலாய் முறை பிசகாகக் கேட்டோ ஜபிப்பதால் எந்தப் பலனும் ஏற்படாதது மட்டுமின்றி தீங்கும் ஏற்படலாம் ராமாவதாரத்தில் திருமாலும் சிவபெருமானும் பிர்மாவும் தினப்படி சந்த்யாவந்தனம், காயத்ரீ மந்திர ஜபம் செய்து வந்தனர். ராமன் யுத்த களத்தில்கூட நேரம் வந்ததும் போரை நிறுத்திவிட்டு காயத்ரீ மந்திர ஜபம் செய்யப் புறப்பட்டார் என்றால் இந்த காயத்ரீ மந்திரத்தின் பெருமை அளவிடப் போதுமோ? இன்றும் நாடாள்பவர்களும் மக்களும் இந்த காயத்திரியின் பெருமையை நல்லோரிடம் கேட்டு உணர்ந்து ஆங்காங்கு காயத்ரீ ஜபத்துக்கு ஏற்பாடு செய்தால் நம் நாடு பழைய ராமராஜ்யமாக ஆகும் என்பது திண்ணம். நாடு கொழிக்க மக்கள் மகிழ்ந்திருப்பார்கள். சண்டை, பகைமை, சச்சரவுகள் ஏற்படாது. நாட்டளவில் செய்யாவிட்டாலும் பெரிய தேவஸ்தானங்களில் இந்தக் காயத்ரீ ஜபங்களை முறைப்படிச் செய்ய ஏற்பாடு செய்தால் நாட்டில் சர்வ சுபிக்ஷமும் ஏற்படும். மேலும் அறிய வேண்டியது பல உண்டு. பெரியோர்களிடம் அடிபணிந்து கேட்டு அறியலாம்.

(தொடரும்)

# திருமங்கை ஆழ்வாரும் திருநாவுக்கரசரும்

உலகத்திலுள்ள மதங்களில் மிகப் பழமையானது இந்து மதம். இதன் காலத்தை அறுதியிட்டு, உறுதிப் படுத்திக் கூறவியலாத அளவில் மிகப் பழமையுடையது ஆகும். இது, பிற மதங்களின் கருத்துகளை ஓரளவு கூறுவதன்றி, காலத்திற்கேற்ப புதிய செய்திகளைக் கொண்டு வெளியிடும் தகுதியுடையதுமாகும். குறிப்பாக, மக்கள் நலத்தையே பெரிதாகக் கொண்டு செய்திகளை வெளியிடும் ஆற்றல் பெற்றது. அறநெறிப் பண்புகளில், மக்கள் நின்று உயர வழி காட்டி நிற்பது.

இம்மதம் எவரும் போற்றிக் கூறும் வகையில் செம்மையுடையது. விழுமிய கருத்துகளைப் பெற்று அழிவில்லாமல் எழிலுடன் மிளிர்வது. ஈடும் எடுப்புமின்றி விளங்கி நிற்பது. இதனை ஒரு பெரிய ஆலமரமாகச் சான்றோர் விளம்புவர். இந்த ஆல மரத்தின் இரும்பெரும் விழுதுகளே வைணவமும் சைவமும் என விவேகானந்தர் போன்ற சமயக் குரவர்கள் போற்றிக் கூறியிருத்தலினை அறிதல் வேண்டும்.

உயர்நலம் அருளும் பரம்பொருளைப் பற்றிக் கூறும் இந்த வைணவத்தையும் சைவத்தையும் தோற்றுவித்த பெருமக்கள் ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஆவார்கள். ஆழ்வார்கள் திருமாலையும், நாயன்மார்கள் சிவனையும் வழிபடும் தெய்வங்களாக ஏற்றுப் போற்றி, பாடிப் பரவி வந்தார்கள். சூரியனை கதிரவன் என்றும், பகலவன் என்றும் பெயர் வைத்தழைத்தல் போல, ஒரே பரம் பொருளான இறைவனை, திருமால் என்றும் சிவபிரான் என்றும் இரு வேறு பெயரிட்டு வழிபாடு நிகழ்த்தி வந்தார்கள். பரம்பொருளை அடைவதற்குக் கூறும் வழிகள் நான்காகும். இவற்றுள் மிக எளிதான வழி பக்தி வழியே.

மக்கள் விழையும் பக்தி வழியினைப் பரப்ப முனைந்த இப்பெரு மக்கள் திவ்வியப் பிரபந்தம், தேவாரம், திருவாசகம் போன்ற இனிய செந்தமிழ்ப் பாடல்களைப் பாடித் தந்தார்கள். இப்பாடல்கள் தாம் விழைந்த கடவுளர்களான திருமாலையும் சிவனையும் பிரித்துப் பேசினாலும், கருத்துகளால் ஒன்றுபட்டு, அத்தெய்வங்களைப் போற்றிப் பேசுகின்றன; புகழ்ந்து பெருமை செய்கின்றன. ஆழ்வார்கள் பாடல்களில் உள்ள கருத்துகள் நாயன்மார்கள் பாடல்களிலும் நாயன்மார்கள் பாடல்களிலுள்ள கருத்துகள் ஆழ்வார்கள் பாடல்களிலும் பயின்று வருதல் காணலாம். இவர்கள் பாடலில் வரும் ஒருமித்த கருத்துகளைக் கொண்டு பார்க்கும்போது இவர்களிடையே வேற்றுமை இருந்திருக்க வியலாது என நாம் உணரலாம். எனவே, வேற்றுமையில் ஒற்றுமை உணர்வினைக் காணவே பாடிய ஆழ்வார்களும் நாயன்மார்களும் நம்மையெல்லாம் நெறிப்படுத்துதற்கு வந்த அருளாளர்கள் ஆவார்கள். அவர்கள் பாடல்களில் வரும் ஒருமித்த கருத்துகளை எடுத்துக்காட்டி, விளக்க எழுந்ததே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

எனவே, இவர்களுள் திருமங்கையாழ்வார், திருநாவுக்கரசர் பாடல்களில் உள்ள, ஒருமித்த செய்திகளைக் காண்போம். ஆயிரத்திற்கும் மேலாகப் பாடியுள்ள திருமங்கையாழ்வார், திருநெடுந்தாண்டகத்தில், எம்பெருமானாகிய கண்ணபெருமான், இந்திரன் பிரம்மா முதலான தேவர்களுக்கெல்லாம் முதல்வனாக மிளிர்கின்றான் என்றும், மண், காற்று, தீ, நீர், வான் ஆகிய பூதங்கள் ஐந்தாகி அகிலத்தை இயக்கி வருகின்றான் என்றும், செழுமையையும் திறனையும் அருளுகின்ற தமிழ் ஓசையாகவும் வட சொல்லாகவும் இருந்து தெளிவினை அருளுகின்றான் என்றும், திசை நான்காயிருந்து நல்வழியைப் புலப்படுத்துகின்றான் என்றும், அவன் குளிர்ச்சியைத் தரும் நிலவாகவும், சுடரும் கதிரோனாகவும் இருந்து உயிர்களின் தோற்ற வளர்ச்சிக்குக் கருத்தாவாயிருந்து நலன் செய்கின்றான் என்றும்,

வானுலகத்தில் வாழும் தேவர்களும் உணர்ந்தறிந்து கூற முடியாத அளவில் அவன் உயர்வில் இருக்கின்றான் என்றாலும் எளியவர்க்கு மிக எளியனாய் இறங்கி உதவுபவன் என்றும், அவன் அறவோனாகவும்;


**திரு. வி. மு. உலகநாதன்,**
**சென்னை.**


அறவோர்களுக்கு அறிவு புகட்டும் மந்திரமாகவும் இருக்கின்றான் என்றும், இந்த மந்திரச் சொல்லை மறவாமல் ஏற்றுப் போற்றி வந்தால், அவன் அருள்புரிவான் என்றும், அதனால் இந்த மண்ணில் நாம் வாழ் வாங்கு வாழலாம் என்றும் தம் மட நெஞ்சிற்கு உரைக்கின்றார். இவற்றை,

'' இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன்
தன்னை
இருநிலம்கால் தீ நீர் விண் பூதம்
ஐந்தாய்

செந்திறத்துத் தமிழ்ஓசை வடசொல் லாகித்
திசைநான்கு மாய்த்திங்கள் ஞாயி றாகி
அந்தரத்தில் தேவர்க்கும் அறியல் ஆகா
அந்தணனை அந்தணர்மாட் அந்தி வைத்த
மந்திரத்தை மந்திரத்தால் மறவா தென்று
வாழுதியேல் வாழலாம் மடநெஞ் சமே.''

எனப்பாடித் தெரியப்படுத்துகின்றார். இப்பாடலில் வரும் சொல்லையும் பொருளையும் திருநாவுக்கரசர் பாடலிலும் பயின்று வரக் காணலாம். மேற்குறித்த பாடலின் ஒன்றிரண்டடிகளில் வரும் சொற்களை அப்படியே உள்ளவாறும், மற்றவடிகளில் பயின்றும்வரும் சொற்களின் பொருளை, வேறு சொற்களை வைத்துக் கருத்து மாறுபடாமலும் நாவுக்கரசர் பாடித் தம் உள்ளக்கிடக்கையினை வெளிப்படுத்தியுள்ளார். இவற்றை,

“வானவன்காண் வானவர்க்கு மேலா னான்காண்
வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன்காண் ஆன்ஐந்தும் ஆடி னான்காண்
ஐயனகாண் கையில்அனல் ஏந்தி ஆடும்
கானவன்காண் கானவனுக் கருள் செய் தான்காண்
கருதிடுவார் இதயத்துக் கமலத் தூறும்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத்துச் செல்வன் தானே.''

எனப்பாடி இயம்புகின்றார். இதில் சிவபெருமான் தேவனாகவும் இருக்கின்றான்; தேவர்களுக்கெல்லாம் தேவனாகவும் இருக்கின்றான்; வேதம் நான்காகவும் பஞ்ச கவ்வியம் ஐந்தாகவும் இருக்கின்றான்; கையில் நெருப்புக் சட்டியினை ஏந்திக் கொண்டு சுடலையில் ஆடிக்காட்டுகின்றான்! விரும்பி அவனைப் பெற இசைத்துப் பாடுவோர்க்கு அருள் புரிபவனாயுமிருக்கின்றான். அவனை மனவுணர்வற்றவர்கள் வேண்டினால் கிட்டுதற்கு அரிதான செல்வமாக இருக்கின்றான். அவனே மனவுணர்வுடைய எளியவர்க்கு எளியனாகிச் சிவபுரத்தில் அருளும் செல்வந்தனாய் உள்ளான் என்றும் பாடி நமக்குக் காட்டி மகிழ்கின்றார் இவ்வாறு.

இந்த இரு அருளாளர்கள் பாடிய பாடல்களில், கருத்தொற்றுமை இருத்தல்தன்னை அறியலாம். திருமங்கை ஆழ்வார் எம்பெருமானை திருமகள் கேள்வனை, தேவர்களுக்கெல்லாம் முதல்வனென்றும், ஐந்து பூதங்கள் என்றும், செந்தமிழ் ஓசையாகவும் வடசொல்லாகவும் உள்ளான் என்றும், திசைகள் நான்காயும் சான்றோனாகவும் இருக்கின்றான் என்றும், சான்றோராக உள்ளவர்க்கு அருள் பாலிக்கும் மந்திரமாக மிளிர்கின்றான் என்றும் தெளிவுப்படுத்துகின்றார். இவரைப் போன்றே,

திருநாவுக்கரசு நாயனார், உமையவள் கேள்வனை, வானவர்க்கு மேலோன் என்றும், வடமொழி தென்தமிழ் என்றும், நான்கு மறைகள் என்றும், பஞ்ச கவ்வியம் ஐந்தென்றும், சிறந்தவனென்றும், வேண்டுவோர்க்கருள்புரிபவன் என்றும்; சிவபுரத்துச் செல்வனென்றும் விவரிக்கின்றார். மங்கையர்க்கோனும் நாவுக்கரசரும் தாம் வழிபடும் தெய்வங்களின் பேராற்றல்களை, எடுத்து இயம்பும் பாடல்களில் ஒரே வித

## தாய் ஆன தலைவன்

தமிழ்நாட்டில் காவிரியின் தென்கரையில் தேசிய நெடுஞ்சாலையில் உள்ள நகரம் திருச்சிராப்பள்ளி ஆகும். இந்நகரம் அன்று கிராமமாக இருந்த நாளில் அங்கு ஒரு தனவந்தர் வாழ்ந்து வந்தார். அவருடைய மனைவி சிவபக்தியிற் சிறந்தொழுகினாள். அவள் கர்ப்பவதியாகி இருக்கும் நாளில் அவளுடைய தாய் காவிரியின் வடகரையில் உள்ள ஒரு ஊருக்குத் திரும்ப எண்ணிய நாளில் காவிரி ஆறு பெருக்கெடுத்து ஓடியது. பாலமோ அல்லது ஆற்று நீரைக் கடந்து செல்ல வசதி ஏதும் இல்லாத காரணத்தால் அவள் ஆற்றின் வடகரையிலேயே தங்க நேரிட்டது. அந்நாளில் தனவந்தரும் ஊரில் இல்லை. தனவந்தரின் மனைவிக்கு பிரசவ வேதனை ஏற்பட்டது. தனக்கு உதவ வேறு ஆள் இல்லாத நிலையில் எல்லாவற்றுக்கும் மேலான இறைவனை எண்ணினாள். எல்லாமும் அறிந்த, தெரிந்த இறைவன் அவளுடைய தாயின் வடிவில் அங்கு தோன்றி, அவளுக்கு வேண்டிய உதவி புரிந்து மறைந்தார். சுகப் பிரசவத்திற்குப் பின் அங்கு வந்த அவளின் தாயும், கணவரும் நடந்தவைகளை அறிந்து வியந்தனர். அது காரணத்தால் இறைவனுக்கு அங்குத் கோயில் எழுப்பி, இறைவனை ‘தாயும் ஆனார்’ என்று ‘திருநாமம்’ பாடி வணங்கினார். அது முதல் எல்லோரும் அங்கு எழுந்தருளியுள்ள இறைவனை ‘தாயுமானவர்’ என அழைத்து வழிபட்டு வருகின்றனர். இத்தல வரலாற்றினை மெய்ப்பிக்கும் வகையான் ‘தாய் ஆகி, தந்தையுமாகித் தாங்குகின்ற தெய்வம்’ என்று பாடிக் கொடுத்தார் அடியார் ஒருவர்.

—முடிவை முத்து.

மான செய்திகளைப் பெய்து பாடிப் பெருமை செய்துற்றவற்றைக் கண்டு நாம் இன்புறலாம் இக்கருத்துப் பொருளால், தம் தெய்வங்களின் பரத்துவத்தைப் பாங்குறப்பாடிச் சிறப்பித்துள்ளார்கள்.

மேலும் இச்சான்றோர்கள் தம் பக்தி உணர்வுக்குத் தடையாகவும் இறைவனை அடைய முடியாதவாறு குறுக்கீடாகவும் இருந்த ஐந்து புலன்களின் கொடுமைகளைப் பற்றிக் கூறியுள்ளார்கள். மாந்தர்கள் நலத்தில், உயர்வில் அக்கறை கொண்டே, இறை வழிபாட்டில் நிலைத்து மாட்சியுறவே விதந்தோதித் தெரிவித்துள்ளார்கள். இருவரும் ஒருமித்த பொறிப் புலன்களின் கொடுமையிலிருந்து மக்கள் விடுபட்டுத் தக்கோராக மிளிரப் பரம்பொருளை இடையறுமல் பரவ வேண்டும் என்று இனிய மார்க்கம் காட்டுகின்றார்கள். பொறிப் புலன்கள் மிகப் பேராற்றல் கொண்டனவாகும். அவற்றை அடக்கி மாந்தன் நெறி நின்று வாழ இயலாது. காரணம், மாந்தனின் அறிவாற்றல், புலன்களின் ஆற்றலை அடக்கியாளும் திறனற்றது. எனவே, அவன் தன்னறிவினை, பரம்பொருளைப் பற்றவிழையும் பக்தி உணர்வோடு ஒன்றுமாறு செய்துவிட்டால், பொறிப் புலன்களின் ஆற்றல் அஞ்சி மறையும். பரிதி வரவால் பனிக்கூட்டங்கள் விலகி மறைதல் போல் இறையுணர்வின் அறிவாற்றலைக் கண்டு, பொறிப் புலன்களின் ஆற்றல் அடங்கி ஒடுங்கும்.

ஆதலால், புலன்கள் செய்யும் கொடுமையை அடக்கவும் அடக்குகின்ற மெய்யுணர்வால், நிலையில் திரியாமல் நிற்கவும் எல்லாம் வல்ல பரம்பொருளைப் போற்றுதல் சிறப்பாகுமென்றார்கள். எவ்வகையிலும் எந்த நிலையிலும் ஏற்படுகின்ற இடர்ப்பாட்டினைத் தம் ஆற்றலால் மாற்றும் இச்சான்றோர்களையும் இந்த ஐந்து புலன்களும் துன்புறுத்தியிருக்க வேண்டும். ஆதலால் இவற்றின் கொடுமையிலிருந்து விடுபட எம்பெருமானிடம் முறையிடு செய்துள்ளார்கள். துன்பம் அறுக்க வேண்டினார்கள்.

இவருள் திருமங்கையாழ்வார், எம்பெருமானே, இந்தப் பொல்லாத ஐம்புலன்களும் என்னுள் தங்கிக் குடும்பம் நடத்துகின்றன. இப்படித் தங்கியுள்ள இவை, நற்செயல்களை நான் எண்ணுதவாறு தீயப்படுகுழியில் தள்ளிவிடுகின்றன. என்னை அரித்துத் தின்று வருகின்றன. ஆதலால் நான் அஞ்சி உன் ஆதரவு பெற்று, அவற்றை விலக்க எண்ணி பொன்னூர் திருவடியை வேண்டுகின்றேன்.

திருமகளுக்கும் அருள்பாலித்த செல்வா! தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய கண்ணா! அழகுமிகுந்து சுடர்ந்தொளிரும் சக்கரத்தை ஏந்தி, வல்லமை காட்டுபவனே! எல்லா உலகங்களையும் ஒரே வாயாக உண்டவனே! எழிலுடைய திருமார்பினை உடையவனே! நான் நல்லனவற்றை ஒருவர்க்குஞ் செய்யாதவாறு, என்னுடனே இருந்து கொண்டு என்னை வருத்தும் ஐந்துபுலன்களும் அரித்துத் தின்று வருகின்றன. அதனால் அஞ்சிய நான் திருவழுந்தூரில் கோயில் கொண்டுள்ள அம்மானுன உன்னை வந்து தஞ்சமடைந்தேன். நீ ஆட்கொண்டு ஆதரிப்பாயாக என்று வேண்டுகின்ற இச்செய்தியினை,

'' திருவுக் கும்திரு வாகிய செல்வா
தெய்வத் துக்கரசே செய்ய கண்ணா
உருவச் செஞ்சுடர் ஆழிவல் லானே
உலகை யுண்ட ஒருவா திருமார்பா
ஒருவன் காற்றி உய்யும் வகையின்றால்
உடனின் 'றைவர்' என்னுள்புகுந் தொழியாது
அருவித் தின்றிட அஞ்சிநின் னடைந் தேன்
அழுந்தூர் மேற்றிசை நின்ற அம்மானே''

என்று பாடித் தெரிவிக்கின்றார். தம்மை ஆட்டிப் படைத்து அரித்துத் தின்று வரும் புலன்கள் ஐந்தினை அடக்கி ஒடுக்க எனக்கு ஆற்றலை அளிக்க வேண்டும், திருவழுந்தூர் அம்மானே உன்னிடம் ஓடி வந்தேன் என்று திருமங்கையாழ்வார் பாடுகின்றார். இவரைப் போன்றே, திருநாவுக்கரசு சுவாமிகளும் பொத்தல்கள் உள்ள என் உடம்பாகிய குடிசைக்குள் புலன்களாகிய ஐவர் புகுந்து அலைக்கழித்து வருகின்றனர். அதனால் என் சிந்தை, தயிரானது மத்தின் அடியுண்டு கலங்குதல் போன்று, கலங்கி வருந்துகின்றது; அந்த ஐம்புலன்களின் கொடுமையை ஒழிக்க, எம்பெருமானே உன்னிடம் அடைக்கலம் முற்றேன். அமரர்களுக்கு அருள் புரிய சித்தத்தையுடையவனே நீ வாழும் சத்தி முற்றத்துக்கு அடியேன் வந்து உன்னுதரவைக் கோருகின்றேன். சிவக்கொழுந்தே வந்தருள் புரிவாயாக என்ற கருத்தினை,

'' பொத்தார் குரம்பை புகுந்'தைவர்'
நாளும் புகலழிப்ப
மத்தார் தயிர்போல் மறுகுமென்
சிந்தை மறுக்கொழிவி
அத்தா அடியேன் அடைக்கலம்
கண்டாய் அமரர்கள்தம்
சித்தா திருச்சத்தி முற்றத் துறையும்
சிவக்கொழுந்தே!''

என்று பாடித் தெரிவிக்கின்றார். ஐம்புலன்கள் செய்யும் கொடுமை பெரிது. அவற்றை மாற்ற ஒரே வழி இறை வழிபாட்டின் அறிவேயாகும். இவ்வறிவினை, மெய்யுணர்வினைப் பெற்றால்தான் மனிதப்பிறவி பயனை எய்தும் என்பதால், திருமங்கை ஆழ்வாரும் திருநாவுக்கரசு நாயனாரும் ஒருமித்தக் கருத்துகளைக் கூறி, தாம் வழிபடும் தெய்வங்களை முன் வைத்துப் பரவி, புலன்களை அடக்கவும், மானுடம் கடைத்தேறவும் வழிகாட்டிப் போந்தார்கள். அவர்களின் புனித நெறியில் நின்று நாம் உய்ய, பேதமின்றிப் பரம்பொருளின் வழிபாட்டை இடையறுமல் நிகழ்த்திப் பெருமை காண்போமாக! ★

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடை திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அங்கு மேலும் பல தங்கு வசதிகளை அமைத்துத்தர தி. தி. தேவஸ்தானம் முழு முயற்சியை மேற்கொண்டுள்ளது. இவ்வகையில், பக்தர்கள் மற்றும் பரந்தமனப்பான்மை கொண்ட யாத்திரிகர்களின் கூட்டு முயற்சியுடன் தன் நன்கொடை திட்டத்தின் கீழ் மேலாண்மை இம்முயற்சியில் இறங்கியுள்ளது.

யாத்திரிகர்களின் பயன் கருதி, பல்வேறு திட்டங்களின் விவரங்கள் கீழ்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளன.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் கட்டடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் ஒவ்வொன்றும் 4 அறைத்தொகுதிகள் கொண்ட 16 குடில்கள் கட்டப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியிலும் குளியலறை மற்றும் பொதுத் தாழ்வாரம் உள்ளடங்கிய 10 X 12 அடி என்ற அளவு கொண்ட அறை இருக்கும். 320 அடி சதுர அளவு கட்டட அறைகொண்ட ஒவ்வொருஅறைத்தொகுதிக்கான நன்கொடை ரூ. 30,000 மட்டுமே ஆகும்.

128 அறைத்தொகுதிகளில் 66 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே பக்தர்கள் அளித்து விட்டார்கள்

8 அறைத்தொகுதிகளின் ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2.4 இலட்சம் அல்லது 4 அறைத்தொகுதிகளுக்கு ரூ. 1.2 இலட்சம் அல்லது இரண்டு அறைத் தொகுதிகளுக்கு ரூ. 60,000/- என்ற வகையில் நன்கொடை அளிக்கலாம்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் திட்டம்

கோயிலின் வடகிழக்கு திசையில் ராம் பகீச்சாவில் மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டுவதென்று முடிவுசெய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு விருந்தினர் விடுதியும் ஒவ்வொன்றும் 50 அறைத் தொகுதிகள் கொண்ட மூன்று தளங்களைக் கொண்டு விளங்கும். குளியலறை வசதியுடன் கூடிய 14 X 16 அடி அளவு கொண்ட அறைகளை ஒவ்வொரு அறைத்தொகுதியும் கொண்டு விளங்கும். 600 சதுர அடி கொண்ட இவை பொது தாழ்வாரம் ஒன்றினைக்கொண்டு விளங்கும். ஒவ்வொரு அறைத்தொகுக்கான நன்கொடை ரூ. 60,000/-ஆகும். மொத்தம் 450 அறைத்தொகுதிகளில், 37 அறைத்தொகுதிகளுக்கான நன்கொடை ஏற்கெனவே வழங்கப்பட்டுள்ளன

## பயன்கள்

1. கட்டடத்தில், நன்கொடையாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ள கருங்கற் பலகை வைக்கப்படும்.
2. நன்கொடையாளர்கள் வருடத்தில் (ஜனவரி முதல் டிசம்பர் வரை) நன்கொடை அளிக்கப்பட்டுள்ள குடில்களில் ஒரு தடவை தங்கும்போது 10 நாட்களுக்கு மிகாமல், 60 நாட்களுக்கு இலவசமாகத் தங்கலாம்.
3. குடில்கள் ஒதுக்கப்படும்போது, நன்கொடையாளர்களின் உறவினர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.
4. நன்கொடையாளர்கள் கேட்கும்போது, அவர்கள் பெயரில் உள்ள குடில்கள் காலியாக இல்லாவிடில், அவர்களுக்கு வேறு தங்கு வசதிகள் செய்து தரப்படும்.

# ★ கல்கி அவதாரம் எப்போது? ★

அண்மையில் மே-85 ஸப்தகிரி இதழில் 38-ஆம் பக்கத்தில் சென்னை-106 ஐச் சேர்ந்த திரு. என்; பாலசுந்தரம் அவர்கள் ஒரு கட்டுரையினை எழுதியிருந்தார்கள். அதில் அவர் ஒரு கல்பத்திற்கு 5000 ஆண்டுகள் என்றும்

| | | |
|---|---|---|
| சத்தியுகம் | 1,250 | ஆண்டுகள் |
| திரேதாயுகம் | 1,250 | ஆண்டுகள் |
| துவாபரயுகம் | 1,250 | ஆண்டுகள் |
| கலியுகம் | 1,250 | ஆண்டுகள் |

என்றும் தற்சமயம் கலியுகம் முடியும் தறுவாயில் உள்ளது என்றும் எழுதியுள்ளார். இதில் சத்தியுகம் என்று புதிதாக ஒரு யுகம் குறிப்பிடப்பட்டுள்ளது. இது முற்றிலும் தவறானது என்பதற்கு பல ஜோதிட நூல்களில் ஆதாரங்கள் உள்ளன. உதாரணமாக

ஜோதிட கிரக சிந்தாமணி என்னும்
பெரிய வருஷாதி நூலில்
(வெளியீடு :- பி. இரத்தின
நாயகர் ஸன்ஸ், சென்னை-1.
ஆண்டு 1957)

கீழ்க்கண்டவாறு 4-வது பக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

யுக வருடம் அறியும்படி,

'' கூறுவேன் வீமநாதர் தான்
சென்னிமேற்
கொண்டு சுவாச மிருபத்
தோராயிரத்
தாறு நூறு கிரே தாயுக மென்பதி
ஞற் பெருக்கத் திரேத மறுபதா
லேறு நாற்பதி லேற்றத் வாபர
மிருபதாலே பெருக்கக் கலியுக
மீறிச் சென்றது மூவாயிரத் தொரு
நூறு மேழ் பத்து வொன்பதாய்
மேவுமே ''

இ-ள் 'வீமேசுரர் திருவடியை சென்னி மேல் வைத்துக் கொண்டு சுத்த கணித பஞ்சாங்கம் பிறக்கும் படி அண்ட நாயகனுக்குச் சரம் இரவி முதலான கிரகங்கள் இராசி நட்சத்திரங்கள் ஒரு சுவாசமாக விடுகின்றது. பகல் 30 நாழிகையாம். உள்ளே வாங்குகிற சுவாசம் இராத்திரி 30 நாழிகையாம். இவை 60 நாழிகையும் அண்ட நாயகனுக்கு ஒரு சுவாசமாக மென்றறிக. இந்த ஒரு சுவாசம் பூலோக நாயகனுக்கு ஒருதின மென்றறிக. இப்படி அண்ட நாயகனுட சுவாசமே தேவர்களும் கிரகங்களும், ரிஷிமுனிசுரரும் மற்றுமுள்ளவைகளெல்லாம் இப்படி நடக்குமென்றறிக. இந்த அண்ட நாயகனுடைய சுவாசம் ஒன்றும் பூலோக நாயகனுக்கு 21600 சுவாசமாய் நடக்கும். இந்த 21600ஐயும் 80-ஆல் பெருக்க 17,28,000 கிரேதாயுகமென்றறிக. இனி திரேதாயுகம் 60-ஆல் பெருக்க 12,96,000 வருடமென்றறிக. இனி துவாபரயுகம் 40-ஆல் பெருக்க 8,64,000 வருஷம் என்றறிக. இனி கலியுகம் 20-ல் பெருக்க 4,32,000 வருஷமென்றறிக. இப்பொது கலியுகத்தில் சாலி வாகனன் ஆண்டதற்கு முன் சென்றது மூவாயிரத்து நூற்றெழுபத்தொன்பது வருஷமாம்'

என்று இவ்வாறாக எழுதப்பட்டுள்ளது. எனவே இதிலிருந்து

| | | |
|---|---|---|
| கிருதயுகம் | 17,28,000 | ஆண்டுகள் |
| திரேதாயுகம் | 12,96,000 | ஆண்டுகள் |
| துவாபரயுகம் | 8,64,000 | ஆண்டுகள் |
| கலியுகம் | 4,32,000 | ஆண்டுகள் |

என்று நமக்குத் தெரிய வருகிறது.

மற்றொரு சோதிட நூலான '' குடும்ப ஜோதிடம் '' ( லிப்கோ வெளியீடு, பக்கம் 21 )

என்ற நூலில் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

''சூரிய சித்தாந்தப்படி கிருதயுகம் திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் எனப்படும் நான்கு யுகங்களைக் கொண்டது ஒரு சதுர்யுகம். ஒருசதுர்யுகம் என்றால் 43,20,000 ஆண்டுகள் கொண்டது.

71 சதுர்யுகங்கள் —1 மன்வந்தரம்
14 மன்வந்தரங்கள் —1 கல்பம்
1 கல்பம் என்றால் பிரம்மாவுக்கு ½ நாள்

நாம் இருப்பது 7-ஆவது மன்வந்தரம். இது வைவஸ்வித மன்வந்தரம் எனப்படும். அதில் சுவேத வராஹ கல்பமாகும். இப்போதைய பிரம்மா 50 ஆண்டுகளை முடித்து 51-ம் ஆண்டில் உள்ளார்''

என்றும், மேலும் அப்பகுதியில்,

''ஒரு நாளில் 21,600 பிறப்புகள் பூலோகத்தில் உதயமாகின்றன. அவற்றில் 7,200 மனிதப்பிராணிகள் ஆவர். ஒரு லக்கினத்தில் 600 மனிதர்கள் பிறப்பார் என சூரிய சித்தாந்தம் கூறுகிறது''

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பொழுது கலியுகம் 5086-வது ஆண்டு நடைபெறுகிறது.

---

**பூம்புகார் ஜி. சீனிவாசன்**

---

உதாரணம் :-
குரோதன வருடம் அசல் 28 நெ.
பாம்பு பஞ்சாங்கம் பக்கம் 3-ல்
கலியப்தம் 5086
சேஷ கலி 426914

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.
இதில்

கலியப்தம்—கலிநடக்கும் ஆண்டு
சேஷ கலி—கலி மீதியுள்ள ஆண்டு
என்றும் பொருள்.

இப்படியிருக்க பிறகு எவ்வாறு கலியுகத்திற்கு 1,250 ஆண்டுகள் என்று கூறமுடியும். பிறகு எவ்வாறு ஒரு கல்பத்திற்கு 5,000 ஆண்டுகள் வரமுடியும்? எனவே தற்சமயம் கலியுகம் முடியும் தறுவாயில் இல்லை. இன்னும் கலியுகம் 4,26,914 ஆண்டுகள் உள்ளன என்பது உறுதி. எனவே திரு என். பாலசுந்தரம் அவர்கள் கூறுவது போல் ஒரு கல்பத்திற்கு 5000 ஆண்டுகள் கிடையாது என்றும், தற்சமயம் கலியுகம் முடிவடையும்தறுவாயில் இல்லை என்றும், ஒரு கல்பத்திற்கு இலட்சக்கணக்கான ஆண்டுகள் உண்டு என்றும் கூற விழைகின்றேன். ★

# நாரணன் நல்கிய நாரீகேளம்



திருக்கோயில்களில் சிறப்புகள் செய்யும் பொழுதும், பூசனைகள் ஆற்றும்போதும், இல்லங்களில் நல்ல செயல்கள் நடத்தும் போதும், யாகம் என்னும் வேள்வியின் போதும் தன்னை முதற்பொருளாக ஆக்கிக் கொள்வதில் தனிச் சிறப்புடையது தென்னை என்னும் தெங்கின் காய்களேயாகும்.

மந்திர தந்திர ஜாலங்கள் செய்யும் மோடி வித்தைகளிலும் தேங்காய் தலைமை வகிப்பதும் நாமறிந்ததாகும்.

எந்த ஒரு தருவிற்கும் ஏதேனும் சிறப்பான காரணம் விளங்குவதுண்டு என்றாலும் இத்தென்னைக்கு மட்டும் மற்ற தருக்களுக்கு இல்லாத பெரும் பெருமையும் பெயரும் ஏற்பட்டுள்ளது.

கண்ணேறு படாமல் இருப்பதற்காகவும் முக்கண்களை உடைய இத் தேங்காயை கற்பூர மேற்றித் திருமணம் பூண்டு வரும் தம்பதியர்களையும், காது குத்தும் சிறு குழந்தைகளின் காதணி விழாவிலே அக் குழந்தைகளையும் சுற்றி, விசிறி அடித்து உடைப்பார்கள்.

தெய்வங்களின் புறப்பாட்டில், அவைகளின் நகர் வலம் முடிந்து கோயிலினுள் மீண்டும் நுழையும் வேளையில் தேங்காயை எடுத்துத் திருச்சிலைகளைச் சுற்றி விசிறி அடிப்பதும் வழக்காறு.

இக்காய்களில் சில காய்கள் அரிதாக ஒற்றைக் கண் உடையனவாகவும், மற்றும் சில ஐந்து கண்கள் கொண்டனவாகவும் இருப்பதும் காணலாம்.

உபாசனை என்று தனித்துவமாக மந்திர சித்தியை அடைவதற்காக இத்தகுக் காய்களைத் தேடி அலைந்து எவ்வளவு விலையென்றாலும் தயங்காமல் அளித்து வாங்குபவர்கள் இன்றும் நம் நாட்டில் உள்ளனர்.

மூன்று கண்களை உடையதாகையால் இதனை முக்கண்ணரின் அமிசம் எனவும், முதற்கடவுள் மாதங்கன் என்னும் விநாயகனின் அமிசம் எனவும் கருதுதல் மரபு.

ஒற்றைக் கண் உடைய தேங்காயை ஏகாட்சரி என்றும், பரப்பிரம்மம் என்றும் பெரியோர் கூறுவர்.

ஐந்து கண்களை உடைய தெங்கினை பஞ்சாட்சரி என்றும், நாராயண அமிசம் என்றும் கருதுதலும் உண்டு.

சத்து சித்து ஆனந்தம் என்கின்ற மூன்றினைக் குறிப்பதாக முக்கண்களை உடைய தேங்காயைச் சொல்வார்கள்.

கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொடுக்கும் இறையின் சந்நிதானத்தில் சூறைக் காய்கள் விடுவதும் இக் காய்களின் சிறப்பை எடுத்துக்காட்டுவதாகும்.

பள்ளி மாணவர்கள் தங்கள் தேர்வில் வெற்றி பெற்றதும் விநாயகர் ஆலயத்தின் முன்பாகச் சூறைக் காய்கள் சிதற அடித்தல் காணலாம்.

சிலர் திருமணம் நிறைவேறினால் சிவனார்க்கு 108 இளநீர்க் காய்கள் நீராட்டுவதாகவும் வேண்டிக்கொள்வர்.

அனைத்து தேவாலயங்களிலும் திருமஞ்சன காலத்தில் இளநீர் இல்லாமல் அபிடேகம் செய்ய மாட்டார்கள்.

சங்கல்பம் என்று கூறும் உறுதிப்பாடு எடுப்பதற்கு வைதீக மந்திர காரியங்களில், ஜபம் செய்யும் முன்பு ஒரு கும்பத்தில் தேங்காயை வைத்து அதனுடன் மாவிலைக் கொத்து இணைத்து, மாலைகள் அணிவித்து குங்குமம், மஞ்சள், தூப தீப மரியாதைகள், திக்பந்தனங்கள், முத்திரிகா லட்சணங்கள் முதலியன காட்டி அதன் பிறகுதான் குறித்த ஜபத்தை உச்சாடனம் செய்வார்கள்.

அந்த கும்பத்தினுள் நீரை நிறைத்து வைத்திருப்பார்கள்.

அந்நீரில் புண்ணிய நதிகளின் இறைச் சக்திகள் யாவும் நிறைந்து நீடிய நலன்களை அளிக்கும் பொருட்டே தேங்காயை அதன்மீது வைக்கின்றனர்.

---

கவிஞர். தண்டமிழ்ப்பித்தன்,
சென்னை-94.

---

உலகெங்கிலும் தென்னை நிறைந்து வளர்ந்தோங்கி இருப்பினும் உற்பத்தித் திறனில் நமது பாரதம் இரண்டாவது இடத்தை உடையதாக விளங்குகிறது என்றால் நமது நாட்டில் அதன் பால் வைத்துள்ள ஊக்கம் நன்கு வெளிப்படும்.

தென்னையைத் தங்களின் பிள்ளையைப் போல் வளர்க்கும் பண்பு நம்மவர்கட்கு இருப்பதால்தான்

அதனை தென்னம்பிள்ளை என்று அன்புப் பெயரால் அழைக்கின்றனர்.

கேரளம், கர்நாடகம், தமிழ்நாடு ஆகிய மூன்று மாநிலங்களில் தென்னை பெரும் அளவில் பயிரிடுகிறார்கள்.

தென்னையில் தேங்காய் மட்டுமின்றி அதன் வேர் முதல் எல்லாப் பாகங்களும் பயனுள்ளனவாக விளங்குகின்றது.

பொதுவாகச் சொன்னால் தென்னை தன்னையே மக்களுக்காக தியாகம் செய்கிறது என்பதே பொருத்தமாகும்.

தேங்காய் பத்தை, தேங்காய் எண்ணெய், தேங்காய் இளநீர், இவை அன்றாட வாழ்க்கையில் பயன்படுவதோடு எண்ணெயை சோப்பு, வனஸ்பதி தயாரிக்கவும், மருத்துவத்திற்கும் உபயோகிக்கிறார்கள். நறுமணப் பொருட்கள் தயாரிக்கவும் பயனுறுகின்றது.

பிண்ணாக்கு கால் நடைகளுக்கு உணவாக விருப்பதோடு, வேறு பல துறைகளுக்கும் உதவுகின்றது.

உதவாதது என்பதே தென்னையில் இல்லை.

பூக்கள் மருந்தாகப் பயன்படுகின்றது. தேங்காய் ஓடுகள் கரண்டி என்னும் அகப்பைகளாகவும், அதன் மூலம் கிடைக்கும் தைலம் படை மருந்தாகவும், அந்த ஓடுகளாகிய கொட்டாங்கச்சிகள் அடுப்பெரிக்கவும்கூட உதவுகின்றன.

தென்னம்பாளைகள் கயிறுகளாக அதாவது பந்தல் போடும் பின்னல் செய்த ஓலைகளை இணைப்பதற்குப் பயன் செய்கின்றார்கள்.

கற்பகத்தரு, நாரிகேளம், மகாபலம், திருடபீஜம், துங்கா, ஸ்கந்தபலா, திருட விருட்சா, லாஙலீ, கூர்ச்சகேசார, தாக்ஷிணாத்யா, சதாபலா, தோயகர்பா, பூதோதகம், வல்து பலா, தீர்க்க பலா என பல பெயர்களால் தென்னையைக் குறிப்பிடுகிறார்கள்.

இப்பெயர்கள் எல்லாம் தென்னையின். இயல்பை வெளிப்படுத்தும் காரணப் பெயர்களாகவே உள்ளன.

தாகத்தைத் தணிப்பது, கேசத்தை அதாவது முடியை வளர்ப்பது, இரணத்தை ஆற்றுவது, பசியைத் தூண்டுவது, வயிற்று வலியை நீக்குவது, ரத்த சூட்டைக் குறைப்பது, உடலுக்கு ஊட்டமளிப்பது என்று ஆயுர்வேத நூல்கள் பலபடப் புகழ்ந்து இத்தென்னையைப் பற்றிக் கூறுகின்றன.

பிரமேகம் என்று சொல்லும் சோகையை நீக்குவதில் தென்னம் பூக்கள் முதன்மை வகிக்கின்றன.

விந்துவைப் பற்றிய வியாதிகளையும் இப்பூக்கள் நீக்குகின்றன.

ஆடி மாதத்தில் ஆடிப்பால் என்று நம்மவர்கள் தேங்காய்த் துருவலை அரைத்து அதனின்றும் பால் பிழிந்து புது மணமான மாப்பிள்ளைகளுக்குக் கொடுத்து உபசரிப்பார்கள்.

இளநீரை அதிகம் சாப்பிடக் கூடாது. அளவோடு உட்கொண்டால் மூத்திர வியாதிகள் நீங்குவதுடன், கண் வியாதிகளுக்கும் நன்மை தரும்.

இளநீர்க் குழம்பு, நாரீ கேளாஞ்சனம் என்ற பெயர்களில் இளநீரினால் செய்த கண் மருந்துகள் மிகவும் பலன் தருகின்றன.

சித்தர்களும் இதனைப் புகழ்ந்துள்ளனர். தேங்காய்ப் பாலை குடித்தால் தேள் விஷத்தால் ஏற்படும் எரிச்சல் குறையும் விஷம் இறங்கும்.

குழந்தைகளின் வயிற்றிலுள்ள பூச்சிகளை நீக்குவதற்கு ஒரு சிறு துண்டு தேங்காய்ப் பத்தையை நெல்லினுள் மூடி அதனை அளவாக நீர் ஊற்றி அடுப்பில் ஏற்றி வேக வைத்து நெல்லை நீக்கிவிட்டு உள்ளே வெந்து போன தேங்காய்த்துணுக்கை மாத்திரம் குழந்தைகளுக்குச் சாப்பிடுமாறு கொடுத்தால் வயிற்றிலுள்ள கிருமிகள் நீங்கும்.

இத்தகைய சிறப்புமிக்க இத்தருவினை நமக்கு அளித்தவர் பகவான் அருள்மிகு நாராயணனின் அவதாரமாகக் கருதிப் போற்றும் பரசுராமர் என்பது சிந்திக்கத் தக்க செய்தியாகும்.

இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களும், புராணங்களும் தேங்காய்த் தருவைப் பற்றிக் கூறுகின்றன. தமிழ் நீதி நூல்களும், இதனை நன்றிக்குச் சான்றாகப் பேசுகின்றன.

கடற்கரை ஓரங்களிலும், ஏரிக்கரை ஓரங்களிலும் வளரும் தன்மை உடையது இத்தென்னையாகும்.

தேவலோகத்திலிருந்து இத்தருவை பரசுராமர் கொண்டு வந்ததாகக் கூறப்படுகிறது. சிவபெருமானுக்கு மிகவும் விருப்பமானது இம்மரமாகும்.

இதனை அரசு, ஆல், போன்று பூஜை செய்வதும் உண்டு. உப்பு நீராக உள்ள கடல் ஓரங்களில் விளங்கினாலும் வருணதேவன் அதாவது கடலின் அதிபதியாகிய சமுத்திர ராஜன் ஒரு கலச நல்ல நீரை இம்மரத்தின் மூலம் அளிப்பதற்காகவே தனது பிரதிநிதியாக இத்தென்னையைப் பயன்படச் செய்கிறான் என்பதும், அந்நீர் தூய்மையான கங்கை நீருக்குச் சமமானதாகும் என்பதும், சிவனுக்கு இதன் காரணமாகவே உகந்ததாயிற்று என்பதுமாகப் பல செய்திகள் பேசுகின்றன.

நமது நாட்டில் சில கடற்கரை இடங்களில் 'தேங்காய்த் திருநாள்' அல்லது 'நாரீ கேளத்திருநாள்' என்ற பெயரில் பண்டிகையே கொண்டாடுகிறார்கள்

தென்னையின் மகத்துவத்தைப் பற்றிப் பெருக்கின் விரிவுபடுமாதலின் முக்கியமாக தேங்காய் உடைப்பவர்கள் அதன் தத்துவங்களைத் தெரிந்து கொள்வது நலம் என்று கருதி அவற்றைக்கூறி இக்கட்டுரையை முடிக்க விழைகின்றேன்.

தேவர்களுக்கு அர்ப்பணிக்கும் படைக்கும் பொருட்களில் உன்னத மானது தேங்கனியாகிய தேங்கா யாகும்.

தேங்காய் ரகங்கள் பல உள்ளன. எனினும் "கவுளி பாத்திரம்" என் னும் மஞ்சள் நிறமுள்ள வகையான தேங்காய்கள்தான் அபிஷேகத் திற்கு மிகவும் உகந்ததாகக் கருதப் படுகிறது.

தேங்காயை வாங்கும்போது சுத்த மானதாகவும், அதிக முற்றியதில்லா மலும், அதிக இளசில்லாமலும் நடுத் தரமாகவுள்ள யௌவனம் என்று சொல்லத் தக்க காய்களையே தேர்ந் தெடுக்க வேண்டும். இளசை பால் யம் என்றும் முற்றியதை விருத்தம் என்றும் சொல்லுவார்கள்.

கோணல் மாணலாகவோ, அழுகிய தாகவோ, நீண்ட வடிவினதாகவோ, மழுமழுப்பானதாகவோ, விரிசல் உள்ளதாகவோ, நீர்வற்றியதாகவோ, கண் இல்லாததாகவோ, அதிகமான பெரியதாக உள்ளதுவோ, சின்னஞ் சிறியதோ, குடுமி இல்லாததோ இறைவனுக்கு உடைக்கக் கூடாது. படைக்கக் கூடாது. எவ்விதமான குற்றங்களும் இல்லாத காயாகப் பார்த்து அதிலும் முன் சொன்னது போல் யௌவனமான நடுத்தரக் காயாகப் பார்த்து வாங்கி முகத்தின் பாகமாய்த் தேங்காயைப் பிடித்துக் கொண்டு அருகில் உள்ள தேங்காய் உடைக்கும் கல்லின்மீது காயை ஒரு சாண் அளவு மேலே தூக்கி மந்திரஞ் செபித்து ஒரே சீராக உடைத்திருந் திருந்தால் சுபத்தைத் தரும். தன தான்ய விருத்தியும் உண்டாகும்.

முகத்தின் பாகம் முக்காலாகவும், அடிப்பாகம் காலாகவும் அல்லது மேற்பாகம் காலாகவும் அடிப்பாகம் முக்காலாகவும் உடைந்தால் கண வன் மனைவி இருவருக்கும் இடையில் நெருங்கிய கலகம் விளையும்.

உடைக்கும் தேங்காய் பொடிப் பொடியாகிவிட்டால் எச்செயலும் வெற்றி பெறாது அழிவு நேரும்.



ஸ்ரீமகுடேஸ்வரர் கோயில் - கொடுமுடி.
இரா. கிருஷ்ணமூர்த்தி - கோவை

கண் உள்ள பக்கமாக கண்ணை ஒட்டி உடைந்து விட்டால் தலைவன் கெடுவான், அதாவது முதலாளி கெடுவான் என்பதாகும்.

மூன்று கண்களில் முதற் கண்ணின் நரம்பில் உடைந்தால் ஆசாரிய னுக்குக் கேடு.

வடபுறத்தில் உள்ள கண்ணின் நரம்பில் உடைந்தால் அரசனுக்கு ஆகாது. மாற்றரசன் வருவான்.

தேங்காயின் முகம் உடைந்தால் சினம் ஏற்படும். வறுமை உண்டா கும்.

நீண்ட வாக்கில் உடைந்தால் பயம் ஏற்படும்.

உடைக்க முனையும் போது தேங் காய் கைநழுவிக் கீழே விழுந்து அப் பால் போனால் கருவிலுள்ள சிசு சிதைவும்; பல சுக்கல்களாகப் போயின் மக்கள் பசியால் வருந்து வர்.

உடைக்கும் தருணத்தில் தேங்கா யினுள் நீர் இல்லாவிடில் வான் பொய்க்கும். மழை இராது.

குடுமி இல்லாதிருப்பின் பொருள் சேதம்.

தேங்காயினுள் நீர் துர்நாற்ற முள்ளதாயின் நாட்டுப் பொருளா தாரம் பழுதாகும்

அழுகியும் துர்நாற்றமும் உடைய தாயின் வைசூரியால் வருந்த நேரி டும். இப்படிப்பட்ட காயாக இருந்து விட்டால் உடனே வேறு ஒரு யௌவனமான காயை வாங்கி வந்து உடைத்தால் அதுவும் முதலில் கூறிய வாறு சமானமாக இரண்டு பாகமாக- மூடிகளாக வருமாறு உடைத்தால் எல்லா நலன்களும் உண்டாகும்.

எனவே தெய்வீக சக்தி வாய்ந்த தேங்கனியான தென்னை மரத்தைப் போற்றி வணங்குவோமாக.





# பக்தி உலகில் பக்தை மீரா

பச்சைப் பசேலென நெற்பயிர் செழிப்புடன் விளைந்திருக்கும் வயலைக் காண்கிறோம்: அப்பயிர் செழிப்புடன் வளர உழவன் எவ்வளவு உழைப்பு செய்ய வேண்டியிருந்திருக்கும்? நிலத்திற்கு, உரிய காலத்தில் நீர் பாய்ச்சியும், தேவையான உரங்களை இட்டும் பயிர் நன்கு வளர பெரும் உழைப்பை நல்குகிறான். அதுபோல பக்திப் பயிர் செழித்து வளர கவிதை இயற்ற வல்ல கவிஞர்கள் தமது கவிதைத் திறத்தாலும், இசைத் திறத்தாலும், இறைவனின் பெருமைகளைப் பாடி வளர்த்தனர். வயல் தரும் நெல் மணிகள் உலகத்தின் வயிற்றுப் பசியைப் போக்கவல்லன. ஆனால் பக்திப் பயிரை நம் மனதில் வளர விட்டால் அது நன்கு வளர்ந்து பக்குவம் பெற்று நாம் வீடு பேற்றைப் பெற வழிவகுக்கும்.

இறைவனான திருமாலைத் தலைமையாய்க் கொண்டு பக்திப் பயிரினைத் தமிழகத்தில் வளர்த்தவர்கள் ஆழ்வார்கள் ஆவர். உலகளந்த பெருமானின் சிறப்புகளை உள்ளம் உருகப் பாடிய அவர்களின் குரல் தமிழகத்திற்கு மட்டும் பயன் தந்துவிடவில்லை. அக்குரலே இந்தி இலக்கிய உலகில் பக்திப் பாதையை அமைக்க அடித்தளமாய் அமைந்தது என்று கூறின் மிகையாகாது. ஏறத்தாழ 14ஆம் நூற்றாண்டு வரை நீதியை போதிக்கும் கவிதைகளையே கவிஞர் பெரு மக்கள் இயற்றி வந்தனர். தமிழகத்தில் தோன்றிய பக்திக் குரல் கேட்டு புதுப்பாதையாம் பக்திப் பாதையை இந்தி இலக்கியத்தில் அமைக்க அவர்கள் உள்ளம் பெரு விருப்பு கொண்டது. அதன்படி நாமதேவர், கபீர்தாஸர், சூர்தாஸர், துளசிதாஸர் எனும் பெரும் கவிஞர்கள் இறைவனின் சிறப்பினை உணர்ந்து அவனது புகழை இசையோடு பாடி மகிழ்ந்தனர். கண்ணனின் மேல் ஆராக்காதல் கொண்டு கான மழை பொழிந்தனர். தமிழகத்தில் தோன்றிய ஆழ்வார்களில் பெண் கவிஞராகத் தோன்றி திருமாலின் சிறப்புரைத்த ஆண்டாளைப் போல், இந்து பக்தி இலக்கிய உலகின் ஒரு விடிவெள்ளியாய் அவதரித்தார் 'மீராவதி'.

எளிய வேய்ங்குழலில் காற்றுப்புக அதனால் பிறப்பது இனிய கானம்: அதுபோல பக்த மீராவின் மனதில் பக்தி எனும் காற்றுப் புக அதனால் தோன்றிய, மனதை உருகச் செய்யும் பாடல்கள்தான் எத்தனை! எத்தனை! தன்னையே இறைவனுக்கு என அர்ப்பணித்துக் கொண்டு வாழ்ந்து இறைவனோடு இரண்டறக் கலந்த ஆண்டாளைப் போல் மீராவும் தன்னை, தனது வாழ்வை, தனது மனத்தை முழு உரிமையாக அன்புடன் கண்ணனுக்கே அர்ப்பணித்தாள். அத்தகைய சிறப்புமிக்க மீராவின் வரலாற்றை நம் மனம் அறிய விழைவது இயற்கையே.

"சின்னஞ்சிறு கிளியே-கண்ணம்மா
செல்வக் களஞ்சியமே
என்னைக்கலி தீர்த்தே-உலகில்
ஏற்றம் புரிய வந்தாய்"

என பாரதியார் உரைத்திருப்பது போல் பக்தி உலகில் ஏற்றம் தந்திடவே மீரா பிறந்தாள் என்று

திரு. எஸ். அனுராதா-சேலம்-9.

கூறின் மிகையாகாது. இராஜஸ்தானைச் சேர்ந்த இராசபுதனத்துப் பெண்ணான மீரா 1573ஆம் ஆண்டு சோககடி என்னும் இடத்தில் பிறந்தாள். வளமை மிக்க குடும்பத்தில் பிறந்ததினால் கவலையே அறியாமல் வளர்ந்தாள். தாய் தந்தையின் அன்பில் நாளும் திளைத்து மகிழ்ந்தாள். அவளது பிஞ்சு மனத்தில் கண்ணன் குடியமரும் தருணமும் வாய்த்தது. ஒரு சமயம் அவளுடைய வீட்டருகே திருமண ஊர்வலம் ஒன்று சென்றது. இன்னிசை மேளங்கள் முழங்கச் சென்ற அத்திருமண ஊர்வலத்தைக் காண மீராவும் அவளது தாயும் வீட்டு வாசலில் வந்து நின்றனர். அவ்வூர்வலத்தை ஆர்வத்

துடன் கண்ட மீரா தன் தாயிடம், "அம்மா! எனக்குத் திருமணம் யாருடன் நடக்கும்?" என ஆவலுடன் வினவினாள்.

பேதைக் குழந்தையின் கபடமற்ற வினவினைக் கேட்ட தாய் அடக்க மாட்டாத கேலிச் சிரிப்புச் சிரித்தாள். ஆனால் மீராவோ தான் முன்பு கேட்ட வினவிற்கு பதிலுரைக்க வேண்டி தாயை வற்புறுத்தினாள். தாயும் குழந்தையின் ஆவலை நிறைவிக்க வேண்டி, "உனது திருமணம் கண்ணனோடு நடைபெறும்" என்றாள். அதற்கு மீரா அக்கண்ணன் எங்கிருக்கிறான் என வினவினாள். அதற்கு அத்தாய் அருகிலிருந்த திரு உருவ பொம்மை ஒன்றைக் காட்டினாள்.

இளம் குழந்தைகளின் மனதில் சில நிகழ்ச்சிகள் ஆழப் பதிந்துவிடுவது இயற்கை. அவ்வாறு அக்குழந்தைகளின் மனதில் பதிந்த எண்ணங்களை மாற்றவோ அழிக்கவோ முடியாது. இது இன்றைய மனோதத்துவ அறிஞர்கள் கூறும் கருத்து. அவர்களின் கூற்றைப் போல் இளம் குழந்தையான மீராவின் மனதில் தாய் சொன்ன பதில் ஆழப் பதிந்தது. 'தனக்கு மணவாளன் மைவண்ணன் கண்ணனே' எனத் தெளிந்தாள். அன்று முதல் கண்ணனின் திருஉருவச் சிலையைப் பூக்களால் அர்ச்சித்தும் பாக்களால் பாமாலைத் தொடுத்தும் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தலாயினாள். அவளது உள்ளத்தில் கண்ணனின் பக்தி நாளுக்கு நாள் பெருகி வளரலாயிற்று. ஆனால் விதியோ அவளது வாழ்வில் தனது விளையாட்டைத் துவக்கியது. தென்றல் காற்றாய் இனிமையாய்ச் சென்று கொண்டிருந்த வாழ்வில் புயல் வீசத் தொடங்கியது: மீராவின் தாயும் தந்தையும் விதியின் வசத்தால் இறக்க நேரிட்டது. தாயையும் தந்தையும் இழந்த மீரா தனது தாத்தாவின் வீட்டிற்கே வந்துவிட்டாள். அவளது தாத்தா பெரும் செல்வந்தர் மட்டுமன்று; கண்ணன் பால் மாறாத பக்தி கொண்டவரும்கூட. மீராவிற்கு இது மிகச் சாதகமாய் அமைந்தது. இளமையிலேயே கண்ணன்பால் தனது மனத்தைப் பறிகொடுத்த மீராவிற்கு தாத்தாவின் வீட்டுச் சூழ்நிலை மிகச் சாதகமாய் அமைந்தது.

மீராவின் காலத்தில் பால்ய விவாகம் நடைமுறையில் இருந்தது; மீராவிற்குத் திருமணம் செய்விக்க எண்ணிய அவளது தாத்தா அவளை மேவார் மன்னனான போஜன் என்பானுக்கு மணமுடித்துக் கொடுத்தார். பன்னிரு வயதே நிரம்பப் பெற்ற மீரா புக்ககம் புகுந்தாள். ஆனால் அவளது மண வாழ்விலும் அவளை விதி தொடரலாயிற்று. திருமணமாகி இரண்டாண்டுகளுக்குள்ளாகவே அவளது கணவன் நோய் வாய்ப்பட்டு இறப்பின் பிடியில் சிக்கி இறந்தார். கணவனை இழந்த மீரா பெரும் கலக்கமடைந்தாள். தனது மனத்துயரைப் போக்கும் வல்லமை கண்ணனுக்குத்தான் உண்டு என்று உணர்ந்தாள். அன்று முதல் கண்ணன் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்களுக்கெல்லாம் சென்று அவன் திருப்புகழைப் பாடுவதே தன் பணி எனக் கொண்டாள். அனைத்து பந்தங்களையும் உதறிவிட்டு கண்ணனின் பெருமையைப் பாடுவதில் முழு மூச்சாய் இறங்கினாள்.

கண்ணனின் திருக்கோயிலுக்குச் சென்று அவனது உருவச்சிலை முன் அவன் புகழைப் பாடுவதும் மன மகிழ்ச்சி கொண்டு ஆடுவதுமாய் இருந்தாள். அவனது அடியார்களுடன் சேர்ந்து கொண்டு பல திருத்தலங்களுக்கும் சென்றாள். இச்சமயத்தில் அவள் எதிர் கொள்ள நேர்ந்த துன்பங்கள் சொல்லி மாளாது. ஆண்கள் கொதித்து எழுந்தனர். ஒரு பெண் அடக்கமில்லாமல் கட்டுப்பாடற்றுத் திரிவது மரபற்றது எனப் பொருமினர். மேவார் அரசே அவளுக்கு எதிராகச் செயல்பட்டது. ஆனால் தனக்கு ஏற்பட்ட எதிர்ப்புகளைக் கண்டு மீரா அஞ்சினாளில்லை. மிரட்டல்களுக்காக அவள் தான் கண்ணன்பால் கொண்டிருந்த காதலை அழித்து விடவுமில்லை. நாளுக்கு நாள் அவளது காதல் வளர்ந்தே வந்தது.

எதிர்ப்புகள் பெருகின; இன்னல்கள் பலவற்றையும் பொறுத்துக் கொண்டாள். கண்ணனின் அருளால் அவள் நஞ்சு உண்ண நேரிட்ட போதும் அவள் இறக்கவில்லை. மேவார் முழுவதும் எதிர்ப்பு கிளம்பியதால் மீரா 1590-ல் கண்ணனின் பிறப்பிடமான பிருந்தாவனத்தைச் சென்று அடைந்தாள். அங்கு அவள் கண்ணனின் பிறப்பு மகிமையைப் பற்றியும் பெருமையைப் பற்றியும் மக்களிடையே எடுத்துரைத்துக் கண்ணனின் பக்தியைப் பரப்பி வந்தாள். மீராவின் பாடலையும் ஆடலையும் காண மக்கள் கூட்டம் பெரு விருப்பம் கொண்டது. இதைக் கண்டு பொறாமை கொண்ட சில கயவர்கள் அவள் மீது அவதூறு கற்பிக்க முயன்றனர். ஆனால் அவர்களின் முயற்சி, பகலவனின் ஒளிக்கிரணத்தில் அழிந்து போகும் காரிருளைப் போல், தோல்வியையே பரிசாகப் பெற்றது. எனவே மீராவை துவாரகையிலிருந்து வெளியேற்ற முயன்றனர். இதைக் கண்டு மீராவின் மனம் பெரும் வாட்டமுற்றது.

கபட உள்ளம் கொண்டவர்களின் இடைவிடாத தொந்தரவு காரணமாகத் தனது பிறப்பிடமான மேவாருக்கே திரும்பிவிட எண்ணினாள்; ஆனால், இதற்கு முன்பு மேவார் மன்னனான இராணாவின் கொடுஞ் செயலையும் கடும் சிறை வாசத்தையும் அனுபவித்ததை எண்ணி மனக் கலக்கமுற்றாள். எனவே மேவார் திரும்பும் எண்ணத்தைக் கைவிட்டாள்.

பெரும் மனத்துயரோடு அன்றைய இரவைக் கழித்த மீரா பொழுது புலர்ந்ததும் விரைந்து எழுந்தாள். கோவிலுக்கு அருகில் இருந்த குளத்தில் நீராடிவிட்டு இறைவனின் சந்நிதியுள் புகுந்தாள். இறைவனை வழிபட கோயிலுக்குள் சென்றவள், வெகு நேரமாகியும் திரும்பவில்லை. இதைக் கண்டு சிலர் கோயிலுக்குள்ளே நுழைந்து பார்த்தனர்; எங்கும் அவளைக் காணவில்லை; முக்திக்காக இறைவனை வேண்டிச் சென்றவளுக்கு இறைவன் முக்தியை அளித்தானோ! அல்லது தன் காதலனை கண்ணனுடன் ஐக்கியமாகி விட்டாளோ, அல்லது கோயிலுக்குப் பின்னால் சென்று கொண்டிருந்த காட்டாற்று வெள்ளத்திற்கு தனது இன்னுடலை அர்ப்பணித்தாளோ! ஒன்றும் அறியக் கூடவில்லை. ஆனாலும் அவளது குரல் என்றும் அவள்தம் பாடல்களில் எதிரொலித்துக்கொண்டே இருக்கும்.

★

---

4-ம் பக்கத் தொடர்ச்சி

நடத்தி வரும் இதிகாச இலக்கியப் போட்டியின் 6வது ஆண்டு போட்டி இவ்வருட ஆரம்பத்தில் மாநிலத்தில் நடைபெற்றது. இப்போட்டியின் முடிவுகள் அண்மையில் வெளியிடப்பட்டன. இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா ஆதரவில் நடைபெற்ற இவ்வாண்டு போட்டியில் 'ஆந்திர மாநிலத்தைச் சார்ந்த 23 மாவட்டங்களில் உள்ள 320 பள்ளிகளைச் சார்ந்த 9577 மாணவ மாணவியர்கள்கள் பங்கேற்றனர். இதில் 604 மாணவ மாணவிகள் முதல் வகுப்பிலும் 1762 மாணவ மாணவிகள் இரண்டாம் வகுப்பிலும் தேர்ச்சி பெற்றனர். சித்தூர் மாவட்டத்தைச் சார்ந்த மாணவர் பி. ஆர். ராஜேஷ் முதலிடம் பெற்றுள்ளார்.

**ஹரிதாஸ சாகித்ய திருவிழா :**

அண்மையில் மஹாராஷ்ட்டிரா மாநிலத்தில் பம்பாயில் மாதுங்கா, முலந்த் மற்றும் புனேயிலும் உள்ளூர் சமய அமைப்புகளின் உதவியுடன் தி. தி. தே. தாஸ சாகித்ய திட்டத்தினர் ஹரிதாஸ சாகித்ய உற்சவத்தை வெகு விமர்சையாகக் கொண்டாடினர். இதுபோது மேற்படி இடங்களில் பல்வேறு பக்தர்களின் திருவுருவப்படங்களும், சமய நூல்களும் இதற்கென ஏற்பாடு செய்யப்பட்ட பொருட்காட்சி அரங்கில் இடம் பெற்றன. மேலும் பல்வேறு சமய இசை நிகழ்ச்சிகளும், உரைக்கோவைகளும் நடைபெற்றன. இவ்விழா நாட்களின்போது திருவாளர்கள் கலகளி பண்டரிநாதாசார்யா, மாளவி ஜெய தீர்த்தாசார்யா, நாக பூஷணராவ், உச்சராவ் பங்கேரி, மருளாளனி தேசாய், பண்டித் நரேந்திரசர்மா, ஏ. பார்த்தசாரதி, அபிதா தேசாய், ஷரத்திகே, ருஸ்தும் பீரந்தாஸ், ஜகன் புஜபல் மற்றும் டி. என். கிருஷ்ணசாமி (F. A. & C. A. O.-T. T. D.) ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர்.

**புதிய திருமண மண்டபம் :**

2-6-85 அன்று கடப்பை மாவட்டம் நந்தியாலாவில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபம் ஒன்றினை தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. வி. கே. டி. வி. சத்யநாராயண ராஜு அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இத்திருமண மண்டபத்திற்கான $2\frac{1}{2}$ ஏக்கர் நிலையத்தினை, அவ்வூரைச் சார்ந்த திருமதி. ஏ. பார்வதம்மா அவர்கள் இலவசமாக வழங்கினார். இவ்விழாவில் பங்கேற்று உரையாற்றிய தி. தி. தே. செயலாட்சித் தலைவர் இத்திருமண மண்டபம் திருமண நிகழ்ச்சிகளுக்காக மட்டுமன்றி, பல சமய நிகழ்ச்சிகளும் நடைபெறும் வகையில் பயன்படுத்தப்படும் என்று கூறினர்.



**வெள்ளிப் பதக்கம்'**

தமிழ் 'ஸப்தகிரி'யை தொடர்ந்து மூன்றுவது தடவையாக 1983-ம் ஆண்டிலும் அதிக எண்ணிக்கையில் விற்ற, 3. புஜங்கராவ் தெரு, ராதா நகர், குரோம்பேட்டை, சென்னை-இல் வசிக்கும், சென்னை நகர 'ஸப்தகிரி' விற்பனைப் பிரதிநிதியான திரு. ஏ. டி. கிருஷ்ணன் அவர்களுக்குத் திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மை, ஸ்ரீ பத்மாவதி தாயார் மற்றும் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த (10 கிராம் எடையுள்ள) வெள்ளி டாலர் ஒன்றினை வழங்கி கௌரவித்துள்ளது.

★

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager. T. T. D. Press. Tirupati-517501

